

இவன் தான் மில்பர்ன்.
அமுல்ஸ்ப்ரே புகட்டத்
தொடங்கியபோது, அவன்
ஒரு மாதக் குழந்தை.

# இப்பொழுது அவனைப் பாருங்கள்!

'' மில்பர்னுக்கு அமுல்ஸ்ப்ரே உடனேயே ஒத்துக் கொண்டது. அவனது பிறப்பு எடை மூன்று மாதங்களில் இரட்டிப்பாகி, மேலும் நன்கு வளர்ந்து வருகிறான் ''

என்கிறார் 13-மாதக் குழந்தை மில்பர்னின் தந்தை திரு, மெல்வின் டி'சௌஸா பெருமிதத்துடன்

தாய்ப் பாலுக்குப் பதிலாகவோ அல்லது உபரி உணவாகவோ ஆயிரக் கணக்கான தாய்மார்கள் முதல் வாரத்திலிருந்தே அமுல்ஸ்ப்ரே உபயோகித்து வருகிறார்கள்

அமுல்ஸ்ப்ரே சீரணிக்க எளிதான, சரி-விகிதக் குழந்தை உணவு நல்ல உடல் வளர்ச்சிக்குத் தேவையான புரதத்தை அதிக அளவில் கொண்டது அது. தவிர, அதில் வைட்டமின்கள், கார்போஹைட்ரேட்ஸ். தாதுப் பொருள்கள் ஆகியவையும் உண்டு. சுருங்கச் சொல்லில், உங்கள் குழந்தை விரைவாகவும் ஆரோக்கியமாகவும் வளரத் தேவையான யாவுமே.

ஸ்ப்ரே—ட்ரையிங் செய்முறையில் தயாரிக்கப்படுகிறது அமுல்ஸ்ப்ரே (உன்னதமான இச் செய்முறையில் தான் குழந்தை உணவுகள் யாவும் அமெரிக்காவில் இப்போது ஆக்கம் பெறுகின்றன). பாலிலுள்ள புரதத்தின் தரத்தை இச் செய்முறை நன்கு பாதுகாக்கிறது.

தயாரிக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே அமுல்ஸ்ப்ரே இந்தியாவிலேயே உச்ச-விற்பனையுடைய குழந்தை உணவாகத் திகழ்வதில் வியப்பென்ன!




# அமுல்ஸ்ப்ரே

தாய்ப் பாலுக்குப்
பதிலாகப் புகட்டச் சிறந்தது!

ASP/AS-8

CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும் அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

ப்ரூக் பாண்ட் நிபுணர்களால் பக்குவம் செய்யப்பட்டிருப்பதே அது சிறந்து விளங்கக்காரணம்.




*க்ரஷ். டியர். கர்ல் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச் சத்துக் கிடைக்கவும் உறுதியளிக்கிறது.



"பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்.!!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!







TP. G. 12 TM

**சௌமிய, மாசி, 4 - 1970, பிப்ரவரி 15**



# கல்கி

பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20 | ரூ. 10 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21 | ரூ. 10/50 |
| இதர நாடுகள் | ரூ. 40 | ரூ. 20 |

காரை ஓட்டுவது
யார்?

PK





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ❊ இதழ் 29



# நீதித் துறையில் சீர்மை

உயர் நீதி மன்றங்களின் நீதிபதிகளது வேலை நிலைமைகளில் என்னென்ன சீர்திருத்தங்கள் தேவை என்று மகாராஷ்டிர அட்வகேட் — ஜெனரல் ஸ்ரீ சீர்வை விவரித்துள்ளார். பம்பாய் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் அவர் ஆற்றிய உரை தெம்பூட்டுவதாக இருக்கிறது. அவரது கருத்துக்கள் முதன்மையான கவனத்துக்கு உரியவை. நெடுங்காலமாக இவ்விஷயமாக நான் எண்ணி வந்தது சரியே என்ற உறுதியை அவரது கருத்து உண்டாக்கியிருக்கிறது. ஸ்ரீ சீர்வை கூறுகிறார் :

"இந்நாட்டில் ஜனநாயகத்தை அரண் செய்து காப்பதற்கு, அச்சமற்ற, சுதந்திரமாய்ச் செயலாற்றக் கூடிய, பட்சபாதமில்லாத நீதித் துறை அடிப்படையான அவசியம். அது அரசியல் சார்புள்ளதாக இருக்கலாகாது; சட்டங்களை நீதி நெறி தவறாமல் விமரிசிப்பதற்கு உள்ள அதிகாரத்தை அடக்கத்துடனும், விவேகத்துடனும் செலுத்த வேண்டும்.

"பிரதம நீதிபதியும் மற்ற நீதிபதிகளும், ராஜீயப் பதவிகளை வகிப்பதற்கு இயலாதபடி, அரசியல் சாஸனத்தைத் திருத்தம் செய்து, தடை விதிக்க வேண்டும். பதவியிலிருந்து ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு, நீதிபதிகள் வழக்கறிஞர் தொழில் நடத்துவது தடை செய்யப்பட வேண்டும். நீதிபதிகளின் ஊதியங்களையும், பென்ஷன்களையும் மிகக் கணிசமாக உயர்த்த வேண்டும்."

ஒரு நீதிபதி அளித்த தீர்ப்பில் அரசியல் பிரசாரம் இருப்பதாகத் தோன்றினாலோ, அல்லது ஏதோ ஓர் அரசியல் கட்சியைக் கவர வேண்டும் என்ற நோக்கத்துடன் தீர்ப்பு அளிக்கப்பட்டதாகவோ இருந்தால், நீதி நிர்வாகத்தில் பொதுமக்களுக்கு உள்ள நம்பிக்கை அடித்தளம்வரை ஆட்டம் கண்டுவிடும் என்கிறார் ஸ்ரீ சீர்வை. உயர்நீதி மன்றங்கள் ஊழலுக்கு உள்ளாவது சாத்தியமல்ல என்ற மரபு இந்நாட்டில் மிகச் சிறப்பாக இருந்து வருகிறது. அந்த மரபை விட்டு விலகிச் சென்ற தருணங்கள் மிகச் சிலவே.

இங்கிலாந்தைவிட இந்தியாவில் நீதிபதிகளின் சம்பளங்களை உயர்த்துவது மிக அவசரமான விஷயமாகி விட்டது என்கிறார் ஸ்ரீ சீர்வை. விலைவாசிகளின் உயர்வும் வரிகள் கூடுதலாக இருப்பதும் இதை அவசியமாக்குகின்றன. அரசாங்கம் செய்யும் சட்டங்களை நீதிமன்றங்கள் பரிசீலித்து முடிவு செய்கின்றன. இது மகத்தான விளைவுகள் கொண்டது. இம்முடிவுகள் சட்டசபைகளின் அதிகாரத்தையே பாதிக்கும் தன்மை உடையவை. ஆகையால்தான் நீதித்துறைத் தலைமையினருக்கு ஊதிய உயர்வு வற்புறுத்தப்படுகிறது.

வழக்கறிஞர்களில் புகழும் பெயரும் பெற்றவர்கள் என்ன சம்பாதிக்கிறார்களோ அதற்கு ஏறக்குறைய சமமாக நீதிபதிகளின் சம்பளம் இருக்க வேண்டும் என்கிறார் ஸ்ரீ சீர்வை. அப்பொழுதுதான் சிறந்த குண நலன்களும், சட்டத்தில் மிகுந்த புலமையும் திறனும் உள்ளவர்கள் நீதிபதிகளாக வருவர் என்ற நிச்சயம் ஏற்படும். முதல் வரிசை வழக்கறிஞர்கள் நீதிபதி பதவிக்கு வரக்கூடியபடி வழி செய்வதுதான் தேங்கியுள்ள வழக்குகளைப் பைசல் செய்யப் பரிகாரமாக இருக்கும் என்கிறார் ஸ்ரீ சீர்வை. இங்கிலாந்தில் நீதித் துறைத் தலைவராகிய லார்டு சான்ஸலரும், அட்டர்னி ஜெனரலும், அமைச்சரவையிலுள்ள மந்திரிகளைவிட அதிகச் சம்பளம் வாங்குகிறார்கள் என்பதை மகாராஷ்டிர அட்வகேட் ஜெனரல் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

பொது வாழ்வில் உள்ள நாணயமும் நீதித் துறையில் உள்ள நாணயமும் ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்பு கொண்டவை. பொது வாழ்க்கையில் ஊழல்கள் காணப்படுவது நடைமுறை உலகின் தவிர்க்கமுடியாத அம்சம் என்று கருதும் ஒரு சமூகம், நாணயத்தின் தகுதிகளைக் குறைத்துக் கொண்டே வரும். ஊழலுக்கு இரை

யாகாத நீதித்துறைக்கு வேண்டிய அடிப்படை அதனால் அகற்றப்பட்டுவிடும். இப்படிப்பட்ட நிலை ஏற்படாதிருக்க வேண்டுமாயின், பொது நிர்வாகத்தின் தகுதிகள் மிக உயர்ந்தவை யாக இருக்க வேண்டும் என்று நம்புகிற வர்கள்தாம் நீதிபதிகளை நியமிக்க வேண்டும். நீதிபதிகளும் அதே உயர் தகுதிகள் படைத்த வர்களாக இருக்க வேண்டும்.

நீதிபதிகளின் நியமன விஷயமாகச் சட்டக் கமிஷன் கூறியதை ஸ்ரீ சீர்வை எடுத்துக் காட்டியிருக்கிறார். 'சுப்ரீம் கோர்ட் நீதிபதி களின் நியமன விஷயத்தில் பிராந்திய, வகுப்புவாதச் செல்வாக்குகள் புகுந்து விளை யாடியிருக்கின்றன. சர்க்காரின் குறுக்கீடு நியமனங்களைப் பாதித்துள்ளது. மிகச் சிறந்த திறமையாளர் இப்பதவிகளுக்குக் கிடைப்பது இயலாது போய் விட்டது' என்கிறது சட்டக் கமிஷன்.

இந்தியாவின் உயர் நீதி மன்றங்களில் லஞ்ச ஊழல் மிகமிகக் குறைவே என்று ஸ்ரீ சீர்வை கூறுகிறார். எனினும் நேராக லஞ்சம் வாங்குவதைவிட மிக நுண்ணிய முறைகளில் ஊழல் இருக்கக் கூடும் என்று அவர் பிரஸ் தாபிக்கிறார். "வழக்குகளை விசாரித்து முடிவு செய்கையிலும், வழக்கறிஞர்களை நடத்தும் விதத்திலும் வர்க்க, சமூக, இனம் போன்ற பாரபட்ச எண்ணங்கள் குறுக்கிடாதபடி நீதி பதிகள் தம்மைத் தாமே காத்துக் கொள்ள வேண்டும்" என்று நீதிபதி ராமசுவாமி 1956ல் கூறியிருக்கிறார். அதைத் தாம் ஒப்புக் கொள்வதாகப் பேசியிருக்கிறார் ஸ்ரீ சீர்வை.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

நம் காலத்தின் தலைசிறந்த விவேகிகளில் ஒருவரான பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் பிப்ரவரி 2ந் தேதி நம்மிடமிருந்து மறைந்துவிட்டார். பல துறைகளில் அவர் ஈடு இணையற்றவர். அவர் நீண்ட நாள் வாழ்ந்தார். தமது வாழ் நாளில் அறிவும் விஷய ஞானமும் உயர்நிலை



அடைந்ததை அவர் கண்டார். தொடர்ந்து அவை வீழ்ச்சியுற்று மதியீனமும், பேராபத் தும் மலிந்து கிடக்கும் உலகையும் அவர் பார்த் தார். பிரிட்டிஷாருக்கு இயற்கையாக உள்ள நகைச்சுவை உணர்வு அவரை விட்டு நீங்கியதே யில்லை. ஆகையால்தான் பேராபத்தைக் கண் டும் அவருக்குப் பித்துப் பிடிக்காமல் இருந்தது.

★

தமது பெயரையும், விலாசத்தையும் கொடுக்காமல் ஒருவர் எனக்கு எழுதியிருக் கிறார். முப்பதாண்டுகளாக நான் எழுதிய அரசியல் விஷயங்கள் அனைத்தையும் அவர் படித்து வந்திருக்கிறாராம். கிறிஸ்துவக் கல் லூரி சஞ்சிகையில் சமீபத்தில் வந்த ஒரு கட் டுரையை அவர் எனக்கு அனுப்பி வைத்துள் ளார். அந்தக் கட்டுரை பின்வருமாறு முடி வடைகிறது: "தீமை வளர்ந்து வெற்றி முழக்கம் செய்ய வேண்டுமானால், நல்ல வர்கள் ஒன்றும் செய்யாமல் சும்மா இருந் தால்போதும் என்று ஒருவர் கூறியிருக்கிறார்."

"ஒரு பெரிய தார்மிக நெருக்கடி தலைதூக் கும்போது நடுநிலைமை வகித்தவர்களுக்கு என்றே நரகத்தில் மிக உக்ரமான பகுதிகளை ஒதுக்கி யிருக்கிறார்கள்" என்று டான்டே கூறியது என் நினைவுக்கு வருகிறது.

★

"பாங்குகள் கடன் கொடுப்பது குறித்து ஒழுங்கு முறைகள் உள்ளன. இவற்றைத் தளர்ச்சியுறச் செய்வது உகந்ததல்ல" என்று ரிஸர்வ் பாங்கு கவர்னரே பீஹார் வர்த்தக சபையில் தெளிவாக நல்லுரை கூறியிருக் கிறார். இது குறித்து மகிழ்ச்சி யடைகிறேன். பாங்குகள் பொதுப் பணத்தின் காப்பாள ராகச் செயலாற்றுபவை என்றும், எனவே அவை கடன் வழங்கும்போது அது நிச்சயம் திரும்பி வரும் என்று உறுதி செய்யும் வகை யில் விவேகமாகச் செயல்பட வேண்டும் என்றும் அவர் கூறியிருக்கிறார். நம் நாட்டில் கூட்டுறவுச் சங்கங்கள் நலிவுறுவதற்குக் கார ணமே அவை வழங்கும் கடன்களைத் திரும்பப் பெற முடியாதிருப்பதுதான் என்பதையும் ரிஸர்வ் பாங்கு கவர்னர் ஸ்ரீ ஜா எடுத்துக் காட்டியுள்ளார்.

★

ஏழை நாடுகளில் பொருளாதார அபி விருத்தி காண்பதற்காக அரசாங்கத்தின் மூலம் மத்திய திட்டங்கள் போடுவதை வன் மையாக ஆட்சேபித்திருக்கிறார் பேராசிரியர் பார். அவர் லண்டன் பொருளாதார வித்தியாசாலையைச் சேர்ந்த பெரும் அறிஞர். மொரார்ஜி வைத்யா நினைவு நிதியின் ஆதரவில் சமீபத்தில் பம்பாயில் பேசிய ஸ்ரீ பார் 'மத் திய திட்டத்தால் ஓரிடத்திலேயே அதிகாரம்

குவியும். அரசாங்கத்தின் அத்தியாவசியமான அம்சங்கள் புறக்கணிக்கப்பட்டுத் திட்டமே முக்கியத்வம் பெற்றுவிடும்' எனக் கூறியுள்ளார்.

* மத்திய அரசுத் திட்டம் வகுக்கப்பட்ட நாடுகளைவிட, சுதந்திரமாகத் தனியார் செயல்பட்ட ஜப்பானில்தான் வெகு விரைவாகப் பொருளாதார முன்னேற்றம் காண முடிந்திருக்கிறது என ஸ்ரீ பார் எடுத்துக் காட்டினார். 'ஏழை நாடுகளின் அரசாங்கம் அதன் அத்தியாவசிய அம்சங்களான சுகாதாரம், சட்டம், ஒழுங்கு, நீதி, வெளி விவகாரம் இவற்றிலேயே கவனத்தைச் செலுத்த வேண்டும். ஆனால் நடைமுறையில் ஏழை நாட்டுச் சர்க்கார்களும் உரியபடி ஆட்சி புரியச் சக்தியற்றவையாகித் திட்டம் போடுவதிலேயே கவனத்தைச் செலுத்துவதாகத்தான் காண்கிறது' என்றார் ஸ்ரீ பார்.

# என்ன சேதி?

## வருந்துகிறோம்

தஞ்சை மாவட்டப் பிரமுகர்களில் ஒருவராக விளங்கிய திரு ரங்கநாத முதலியார் அவர்களின் மறைவு குறித்து மிக வருந்துகிறோம். வடபாதிமங்கலம் திரு வி. எஸ். தியாகராஜ முதலியார் அவர்களின் தந்தையான திரு ரங்கநாத முதலியார் பல துறைகளில் சமூகப் பணியாற்றியவர். பல தர்மங்களைப் புரிந்த அவர் திருவாரூரில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித் தனியே பள்ளிகள் நிறுவித் தந்தார். திருவாரூர் தியாகராஜ சுவாமியின் புகழ்பெற்ற தேரைப் புதிதாக நிர்மாணிப்பதிலும், கமலாலயத் திருப்பணி செய்வதிலும் அவர் எடுத்துக் கொண்ட பெரும் பங்கு அவரை ஆஸ்திக உலகின் மறையாத நன்றிக்கு உரித்தாக்கியுள்ளன. திரு ரங்கநாத முதலியாரவர்களது குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்கள்.



திரு ரங்கநாத முதலியார்.

## தீர்த்த நாராயணர் திருவிழா

தஞ்சையை அடுத்த திருப்பூந்துருத்தியில் ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெற்றுவரும் ஸ்ரீ தீர்த்த நாராயண ஸ்வாமிகளின் ஆராதனை இவ்வருடமும் ஆறு நாட்கள் (பிப்ரவரி 10–15) நல்ல முறையில் நடைபெறுகிறது. பல பிரபல இசைக் கலைஞர்கள் விழாவில் பங்கு கொண்டு, தீர்த்த நாராயணரின் தரங்கிணிப் பாடல்களைப் பாடுகின்றனர். அறிஞர்கள் உரை ஆற்றுகின்றனர்.

இச்சந்தர்ப்பத்தில் ஒரு நல்ல சேதி. ஸ்ரீ தீர்த்தநாராயணரின் 'கிருஷ்ணலீலா தரங்கிணி'ப் பாடல்களில் சிலவற்றை சங்கீத கலாநிதி ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யரவர்கள் திருத்தமாக மெட்டுகள் கச்சிதம் செய்திருக்கிறார். இப் புத்தகத்தை நாராயண தீர்த்த ஸ்வாமி ஆராதனைக் கமிட்டியார், சங்கீத நாடக அகாதமியின் உதவியுடன் விரைவில் பிரசுரிக்கவிருக்கிறார்கள்.

# பொன்னியின் செல்வன்



### இருபத்தினான்காம் அத்தியாயம்

## நினைவு வந்தது

**வா**னதி மீண்டும் ஒருமுறை நினைவற்ற நிலையை அடைந்தாள். அவளுடைய கண்களும் மூடிக் கொண்டன. கொஞ்சம் கொஞ்சமாகச் சுய நினைவு வரத் தொடங்கியது. நாகலோகத்திலோ தேவலோகத்திலோ தான் இளவரசரை மணந்தது வெறும் பிரமை என்பதை உணர்ந்தாள். இளவரசரைப் பற்றிய துயரமான செய்தி கேட்டதையும் அதன் பேரில் தான் ஓடைக் கரையில் வந்து நின்றதையும் தலை சுற்றி நீரில் விழுந்ததையும் நினைவு படுத்திக் கொண்டாள். இந்த நினைவுகள் அவளுக்கு எல்லையற்ற ஏமாற்றத்தை அளித்தன; நெஞ்சில் சுருக்கென்று ஈட்டி பாய்வது போன்ற வலியையும் அளித்தன. கண்களைத் திறக்க முயன்றாள். ஆனால் முடியவில்லை. தன்னைத் தண்ணீரிலிருந்து தூக்கிக் கரை சேர்த்தது யாராயிருக்கும்? இளைய பிராட்டியாகத்தான் இருக்க வேண்டும். சற்றுத் தூரத்தில் படகில் வந்து கொண்டிருந்த குந்தவை தேவியாகத்தான் இருக்க வேண்டும். தன்னை எதற்காக அவர் காப்பாற்றியிருக்க வேண்டும்? ஓரேயடியாக முழு

**அமரர் கல்கி**







இத் தொலைந்து போய்விடும்படி விட்டிருக்கக் கூடாதா? கண்களைத் திறந்து பேசுவதற்கு முடிந்தவுடனே ''ஏன் என்னைக் காப்பாற்றினீர்கள்?'' என்று இளைய பிராட்டியுடன் சண்டை பிடிக்க வேண்டும்! தம்முடைய அருமைத் தம்பியிடம் அவருடைய அன்பு இவ்வளவு தானா?...

இதோ இளைய பிராட்டி பேசுகிறார். என்ன சொல்கிறார்? யாரிடம் சொல்கிறார்? கேட்கலாம்:

'' மயக்கத்தில் ஏதேதோ பிதற்றுகிறாள்! இந்த மட்டும் உயிர் பிழைத்ததே பெரிய காரியம்! நம்முடைய படகு மட்டும் இன்னும் சற்றுத் தூரத்தில் இருந்திருந்தால்? இவள் ஓடையில் விழுந்தது நம் கண்ணிற் படாமல் போயிருந்தால்? — அதை நினைத்தாலே எனக்குக் கதி கலங்குகிறது!''

''நாம் பாராமல் விட்டிருந்தால், ஒரு விதத்தில் நல்லதாய்ப் போயிருக்கும். இந்தப் பெண்ணின் வாழ்க்கை இனிதாக முடிந்திருக்கும். தங்களால் உயிர் பிழைத்த கொடும்பாளூர் இளவரசி வாழ்க்கையில் எவ்வளவோ மனவேதனைப் படவேண்டியிருக்கும்....''

ஆகா! இது யார், நம்மிடம் இவ்வளவு அநுதாபத்துடன் பேசுகிறது? ஆம், அந்த வாலிபர்தான்! குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரசலாற்றங் கரையிலும் பார்த்த அந்த வீர வாலிபர்தான்! இளவரசர் கடலில் மூழ்கிய செய்தியையும் அவரே கொண்டு வந்திருக்க வேண்டும். இன்னும் இவர்கள் என்ன பேசிக் கொள்ளப் போகிறார்கள்? கேட்கலாம். கண்ணைத் திறக்க முடியாவிட்டாலும் நன்றாய்க் கேட்கிறதல்லவா?

''இது என்ன இவ்வளவு நெஞ்சிரக்கமில்லாமல் பேசுகிறீர்? ஆண் பிள்ளைகளின் மனமே கல்மனசாகத்தான் இருக்குமோ?'' என்றது இளைய பிராட்டியின் குரல்.

''அப்படிக் கல் நெஞ்சன் என்று தீர்ப்புக் கூறும்படியாக இப்போது நான் என்ன சொல்லி விட்டேன்?''

''இந்தப் பெண் இறந்திருந்தால் நல்லது என்று சொன்னீரே? அது போதாதா? எவ்வளவு சிரமம் எடுத்து இவளை நான் வளர்த்து வருகிறேன், தெரியுமா?....''

''இவள் பிதற்றிய வார்த்தைகளைத் தாங்கள் கேட்டீர்களா?''

'' உம்முடைய செவிகளில் என்ன விழுந்தது?''

''இளவரசரை மணந்து கொள்வது பற்றி ஏதோ சொன்னதாகக் காதில் விழுந்தது....''

''ஆம், நினைவு தெரியாத மயக்கத்திலே கூட அவளுடைய வாய் அப்படி முணு முணுத்தது. இளவரசர் மீது ஆசை அவள் உள்ளத்தில் அப்படி வேரூன்றியிருக்கிறது.''

''அந்த ஆசை இந்தப் பெண்ணுக்கு நல்லதல்ல! அதனால் துன்பமும் ஏமாற்றமுந்தான் ஏற்படும்.''

''ஏன் அவ்வாறு சொல்கிறீர்? இவளைக் காட்டிலும் இளவரசருக்கு ஏற்ற உயர் குலப் பெண் வேறு யார்? புராதனமான கொடும்பாளூர் வீர வம்சத்தைப் பற்றி உமக்குத் தெரியாதா?''

''நன்றாய்த் தெரியும். நான் நினைப்பது ஒன்று; தாங்கள் சொல்வது இன்னொன்று. இந்தப் பெண் எவ்வளவு உயர் குலமாயிருந்தால் என்ன? இவள் மனத்தில் உள்ள சபலம் நிறைவேறப் போவதில்லை....''

''கட்டாயம் நிறைவேறியே தீரும். அது இவள் மனத்தில் உள்ள சபலம் அன்று. என்னுடைய மனோரதம்; நான் செய்திருக்கும் தீர்மானம்.''

''தங்கள் தீர்மானமாயினும் இந்த விஷயத்தில் நிறைவேறாது.''

''ஏன் மீண்டும் அவ்விதம் சொல்கிறீர்? இளவரசர் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பத்திரமாக இருக்கிறார் என்று சற்று முன் நீர் கூறியது உண்மைதானே?''

ஆகா! இது என்ன இன்பமான செய்தி? இளவரசர் பத்திரமாயிருக்கிறாரா? நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கிறாரா? இந்தச் செய்தியைக் கேட்க இந்தச் செவிகள் கொடுத்து வைத்திருந்தனவே? ஓடையின் நீரில் மூழ்கிச் சாகாமல் நான் உயிர் பிழைத்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று! இளைய பிராட்டிக்கு எத்தனையோ விதத்தில் நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். இதுவும் ஒன்று இப்போது சேர்ந்தது. ஆனால் ஐயோ! இது என்ன மேலே இவர் சொல்லும் செய்தி? செவியில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருக்கிறதே!

''அம்மணி! இளவரசர் பத்திரமாயிருக்கிறார் என்பது உண்மைதான். அதனால் இவளுடைய ஆசை நிறைவேறும் என்பது என்ன நிச்சயம்? இளவரசர் இந்தப் பெண்ணை மணந்து கொள்ள மாட்டார் என்று நான் நினைக்கிறேன்.''

''நீர் எதை வேணுமானாலும் நினைக்கலாம். இந்த உலகில் நான் இட்ட கோட்டைத் தாண்டாமல், என் பேச்சைத் தட்டாமல் நிறைவேற்றக் கூடிய ஓர் ஆண்மகன் இருக்கிறான். அவன்தான், என் தம்பி அருள்மொழி வர்மன்!''

''இளவரசி! அத்தகையவன் நானும் ஒருவன் இருக்கிறேன்...''

''பின்னர் என்ன எனக்குக் குறை? என்னுடைய எண்ணத்தை நிறைவேற்றுவதற்கு என்ன தடை? பழுவேட்டரையர்கள் இதற்குக் கூடக் குறுக்கே வருவார்களா, என்ன?...''

''அது எனக்குத் தெரியாது. தங்களிடம் இளவரசருக்கு எல்லையற்ற அன்பு உண்டு என்பதை நான் அறிந்திருக்கிறேன். வேறு எந்தக் காரியத்திலும் தங்கள் வார்த்தையைக் கேட்பார். அவருக்கு இராஜ்யம் ஆளுவதற்குச் சிறிதும் இஷ்டமில்லை. என் கண் முன்னால் இலங்கை மணிமகுடத்தை வேண்டாம் என்று மறுத்தார். ஆயினும் தாங்கள் வற்புறுத்தினால் இராஜ்யம் ஆளுவதற்குக் கூடச் சம்மதிப்பார். ஆனால் இந்தப் பெண்ணை மணப்பதற்கு....''

''சம்மதிக்க மாட்டான் என்று சொல்கிறீர்? அவ்விதம் என் அருமைத் தோழியை நிராகரிப்ப்தற்கு அவன் இவளிடம் என்ன குறையைக் கண்டான்? நீர்தான் என்ன கண்டீர்?''

''அம்மணி! நான் இந்தப் பெண்ணிடம் ஒரு குறையையும் காணவில்லை. கண்டாலும் நம்ப மாட்டேன். இளையபிராட்டி அரண்மனையில் பணி செய்யும் எல்லாரிலும் கீழான சேடிப் பெண்ணும் எனக்குத் தேவகன்னிகை



தான். இளையபிராட்டியின் தோட்டத்தில் வாழும் முயற்குட்டி என் கண்களுக்குத் தேவேந்திரனுடைய ஐராவதத்துக்கும் மேலானதாகத் தோன்றும். இளவரசரும் இந்தப் பெண்ணிடம் குறை ஒன்றையும் காணவில்லை. ஆனால் அவருடைய மனம் வேறொரு பெண்ணிடம் சென்றிருக்கலாம் அல்லவா?...''

ஐயோ! எவ்வளவு கொடுமையான வார்த்தைகள்! இந்த வாலிபர் எதற்காக இவ்விதம் நம்முடைய புண்பட்ட உள்ளத்தில் வேலை எடுத்துக் குத்துகிறார்?

''வாணர் குலத்து வீரரே! தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. என் தம்பியைப் பற்றி ஏன் இப்படிப்பட்ட அவதூறு கூறுகிறீர்?''

''அவதூறு ஒன்றும் இல்லை அம்மணி! உண்மையைத்தான் கூறுகிறேன். கண்ணால் கண்டு, காதினால் கேட்டதைச் சொல்லுகிறேன்...''

''மேலே சொல்லுக! எவ்வளவு கஷ்டமான விஷயத்தைக் கேட்கவும் இப்பொழுது நான் சித்தமாயிருக்கிறேன்.''

''ஓடக்காரப் பெண் பூங்குழலி என்பவளைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இலங்கைக்கு என்னைக் கொண்டு போய்ச் சேர்த்தவளும் அவள்தான். இளவரசரையும் என்னையும் கடலிலிருந்து காப்பாற்றியவளும் அவள்தான். சூடாமணி விஹாரத்துக்கு இளவரசரைப் படகில் ஏற்றிக் கொண்டு போயிருப்பவளும் அவள்தான். சேந்தன் அமுதனை மட்டும் நம்பி இளவரசரை நான் ஒப்புவித்து வந்திருக்க மாட்டேன். பூங்குழலியை நம்பித்தான் ஒப்புவித்திருக்கிறேன். அந்தப் பெண்ணுக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் இளவரசருக்காக அர்ப்பணம் செய்வாள்..''

''அதனால் என்ன? ஓடக்காரப் பெண் ஓடக்காரிதானே? உலகமாளப் பிறந்தவனை மணப்பது பற்றி அவள் கனவு காண முடியுமா? தரையில் தத்திக் குதிக்கும் சிட்டுக் குருவி வானத்தில் உயரப் பறந்து வட்டமிடும் கருடனை ஏறிட்டுப் பார்க்க முடியுமா?''

''ஏன் முடியாது? சிட்டுக் குருவியும் கருடனை அண்ணாந்து பார்க்கலாம். கருடனும் சிட்டுக் குருவியைக் குனிந்து பார்த்து ஆசைப்படலாம்.''

''என் தம்பியின் மனத்தில் அப்படி ஏதேனும் எண்ணம் உதித்திருந்தால் அதைப் போக்குவதற்கு நான் ஆயிற்று. கூடவே கூடாது. எத்தனையோ அபாயங்களிலிருந்து அருள்மொழி வர்மனை நான் தப்புவித்திருக்கிறேன். இந்த ஓடக்காரியின் மோக வலையிலிருந்தும் நான் தப்புவிப்பேன்...''

''ஓடக்காரி என்றால் அவ்வளவு தள்ளுபடியா? குலமும் கோத்திரமும் அவ்வளவு முக்கியமா? ஓடக்காரியின் உடம்பில் ஓடுவதும் சிவப்பு இரத்தம் தானே? அவளுடைய நெஞ்சம் அரண்மனையில் பிறந்த இளவரசிகளின் நெஞ்சைப் போல் துடிப்பதில்லையா? பார்க்கப் போனால் இளவரசியின் அன்பில் இராஜ்ய ஆசை முதலியவை கலந்திருக்கலாம். ஆனால் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பு மாசற்றது. புனிதமானது. இளவரசரும் அவ்வாறுதான் நம்புகிறார். மற்றவர்கள் ஏன் குறுக்கே வந்து தடை செய்ய வேண்டும்? இப்போது, வந்து, வந்து, ஊஹூம்—என் விஷயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடைய நெஞ்சைப் பிளந்து அதனுள் இருப்பதைத் தங்களுக்கு நான் வெளியிட்டுக் காட்ட முடியுமானால்...''

''வேண்டாம், வேண்டாம். உம்முடைய நெஞ்சில் இருப்பது அப்படியே பத்திரமாய் இருக்கட்டும். அதுதான் நல்லது. அன்பு, ஆசை, காதல் என்பவை எல்லாம் உலகில் பிறந்த மற்றவர்களுக்குச் சரிதான். ஆனால் இராஜ்யம் ஆளப் பிறந்தவர்களின் விஷயம் வேறு. அவர்கள் இராஜ குலத்திலேயே கலியாணம் செய்துகொள்ள வேண்டும். மனத்தைச் சிதறவிடக் கூடாது. தவறினால் அதன் மூலம் பல தொல்லைகள் ஏற்படும். எங்கள் குடும்பத்திலேயே அதற்குத் தகுந்த உதாரணம் இருக்கிறது. என் தந்தையின் இளம் பிராயத்தில் —இராஜ்யம் அவருக்கு வரும் என்ற உத்தேசமே இல்லாதபோது. — இப்படித்தான் காட்டில் வளர்ந்த ஒரு பெண்ணை ....! ஆனால் இதையெல்லாம் இப்போது உமக்கு நான் எதற்காகச் சொல்லவேண்டும்? இந்தப் பெண்ணுக்கும் மூர்ச்சை தெளிந்து சுய நினைவு வந்து கொண்டிருக்கிறது. கண்ணிமைகள் அசைகின்றன. வேறு ஏதேனும் சொல்வதற்கு இல்லையா? ஈழ நாட்டில் இன்னும் பல அபாயங்களுக்கு நீங்கள் உள்ளானதாகச் சொன்னீர் அல்லவா? அதைச் சொல்லுங்கள்.''

''ஆம், இளவரசி! இலங்கைச் சிம்மாசனத்தையும் மணி மகுடத்தையும் இளவரசர் மறுத்துவிட்டு வந்த அன்று இரவு நாங்கள் அநுராதபுரத்தின் வீதிகளில் வந்துகொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு கட்டிடத்தின் முன் பகுதி இடிந்து விழுந்தது. ஒரு கண நேரம் நாங்கள் அங்கே தாமதித்திருந்தால் எங்கள் தலையில் விழுந்திருக்கும். உயிரோடு சமாதி ஆகியிருப்போம். அச்சமயத்தில் ஒரு பெண்மணி திடீரென்று அங்கே

தோன்றினாள். சமிக்ஞை செய்து இளவரசரை அழைத்தாள்....''

''கடவுளே! அங்கேயும் ஒரு பெண்தானா உங்களைக் காப்பாற்றுவதற்கு? அந்தப் பெண் யார்?''

''அவள் யாரோ எனக்குத் தெரியாது. ஆனால் இளவரசருக்கு முன்னால் பழக்கமுள்ளவளாகத் தோன்றியது.... வீண் சந்தேகத்துக்கு ஆளாக வேண்டாம், அம்மணி! அந்த அம்மாள் பிராயம் முதிர்ந்தவள்...''

''எவ்வளவு பிராயம் இருக்கும்?''

''இளவரசரின் அன்னையாக இருக்கக் கூடியவள். அதோடு காது செவிடு, வாயும் ஊமை!''

''என்ன? என்ன? இன்னொரு தரம் சொல்லுங்கள்!''

''பிறவிச் செவிடும் ஊமையுமான ஒரு மூதாட்டி அவள். பிராயம் நாற்பத்தைந்துக்கு மேல் இருக்கும்...''

''ஐயா! அப்படி ஒரு மூதாட்டியை ஈழ நாட்டில் பார்த்தீரா? அவளைப்பற்றி மேலும் சொல்லுங்கள். அவளுடைய பிறப்பு வளர்ப்பைப் பற்றி ஒன்றும் தெரியாதா? அவள் எங்கே பிறந்தவள்?''

'' ஈழ நாட்டை அடுத்துக் கடலில் உள்ள ஒரு தீவில் பிறந்தவள்...''

இளவரசி குந்தவை தேவி அளவிலாத பரபரப்பை அடைந்து, ''ஐயா! இன்னும் சொல்லுங்கள்! பார்ப்பதற்கு அவள் எப்படி இருக்கிறாள்?'' என்றாள்.

''அம்மணி! அவளுடைய தோற்றத்தில் ஓர் அதிசயத்தைக் கண்டேன். அதைச் சொல்வதற்கே எனக்குத் தயக்கமாக இருக்கிறது.''

''தயக்கம் வேண்டாம்! சீக்கிரம் சொல்லுங்கள்.''

''சோழ நாட்டில் நான் பார்த்த ஒரு பெண்ணைப்போலவே அவள் இருந்தாள். வயது மட்டும்தான் அதிகம். ஆடை ஆபரணங்கள் பூணாமல் தலைவிரி கோலமாயிருந்தாள். மற்றபடி இங்கே நான் பார்த்த பெண்ணைப்போலவே தோன்றினாள். அதே முகம்; அதே தோற்றம்; உண்மையில் நான் ஒரு நிமிஷம் ஏமாந்து போய்விட்டேன்.''

''ஐயா ! அப்படிப்பட்ட பெண்,— இங்கே உள்ளவள், — யார் ?''

''இளவரசி ! தங்களால் ஊகித்துத் தெரிந்து கொள்ள முடியவில்லையா ?''

''நானா? இந்தப் பெண் வானதியா ? தஞ்சை அரண்மனையில் உள்ள என்னுடைய அன்னையா ?''

'' நீங்கள் குறிப்பிட்ட யாரும் இல்லை.''

''பழுவூர் இளையராணி நந்தினியா?''

''ஆம், நந்தினிதான் !''

'' கடவுளே ! அப்படியானால் நான் சந்தேகித்தது உண்மைதான்.''

''என்ன சந்தேகித்தீர்கள் ?''

''விஷ நாகத்தைவிடக் கொடியவள் என்று எண்ணி நான் வெறுத்தவள் உண்மையில் என் தமக்கையாக இருக்கலாமோ என்று சந்தேகித்தேன். அது நிஜமென்று தாங்கள் சொல்வதிலிருந்து தெரிந்தது. விதியின் கொடுமையே கொடுமை. இதிலிருந்து குலம் கோத்திரம் தெரியாத ஒரு பெண்ணை அரச குலத்தைச் சேர்ந்தவர் மணப்பது எவ்வளவு பிசகு என்று தெரிகிறது.''

''அம்மணி ! நான் அவ்விதம் குலம் கோத்திரம் தெரியாதவன் அல்ல. எங்கள் மூதாதையர் முந்நூறு வருஷங்களாகச் செந்தமிழ் நாட்டை ஆண்டு வந்தார்கள். சேர சோழ பாண்டியர்களைச் சிறையில் அடைத்தார்கள். இன்றைக்கு எனக்கு இராஜ்யமில்லாத போதிலும் என் கையில் வாள் இருக்கிறது; என் தோளில் வலிமை இருக்கிறது; என் நெஞ்சில் தைரியம் இருக்கிறது....''

''ஐயா ! தங்கள் பெருமைகளைக் கொஞ்சம் பின்னால் கேட்டுக் கொள்கிறேன். உடனே செய்வதற்குப் பல காரியங்கள் இருக்கின்றன. உம்முடைய உதவி இன்னமும் எனக்குத் தேவை. அளிப்பீர் அல்லவா ?''

''எனக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் தங்களுக்காகக் கொடுக்கச் சித்தமாயிருப்பேன்.''

'' ஓடக்காரப் பெண் பூங்குழலிக்கு நீர் உடன் பிறந்தவர் போலிருக்கிறது. நல்லது; அந்தப் பேச்சு இப்போது வேண்டாம். இதோ, இந்தப் பெண் கண்ணைத் திறக்கப் போகிறாள்....''

ஆம்; இதற்குள் வானதிக்குப் பூரண நினைவு வந்து விட்டது. உடம்பிலும் சக்தி பிறந்து விட்டது. மனத்தில் பலப் பல யோசனைகள் உதித்தன. இளவரசரிடம் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பைவிடத் தன்னுடைய அன்பு அதிகமானது என்பதை நிரூபிக்கும் வரையில் தான் உயிரோடிருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். அத்துடன் தஞ்சை அரண்மனையில் சக்கரவர்த்தி படுத்திருந்த அறையில் அன்றொரு நாள் இரவு தான் கண்ட காட்சியும் கேட்ட புலம்பலும் நினைவுக்கு வந்தன. அவற்றின் பொருளும் ஒருவாறு விளங்கத் தொடங்கி விட்டது.

வானதி கண் விழித்ததும் இளைய பிராட்டி, ''என் கண்ணே ! உனக்கு இப்போது எப்படி இருக்கிறது?'' என்று அன்போடு கேட்டாள்.

''எனக்கு ஒன்றுமில்லை, அக்கா! உங்களுக்குத் தொந்தரவு கொடுத்து

விட்டேனே என்பதை நினைத்தால்தான் சங்கடமாக இருக்கிறது'' என்றான்.

அச்சமயத்தில் ஆழ்வார்க்கடியான் பிரவேசித்து, ''நானும் தொந்தரவு கொடுக்கத்தான் வந்திருக்கிறேன், தேவி! அரண்மனை வாசலில் ஒரே ஜனக் கூட்டமும் குழப்பமுமா யிருக்கிறது. இள வரசர் கடலில் முழுகிவிட்டது பற்றி ஜனங்கள் ஒரே ஆத்திரமாக இருக்கிறார்கள். தாங்கள் உடனே வந்து சமாதானம் சொல்லா விட்டால் விபரீதம் நேரலாம்'' என்றான்.

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# முதன்மந்திரி வந்தார்

பழையாறை நகரின் வீதிகள் இன்றுவரை என்றும் கண்டிராதபடி அல்லோல கல்லோலமாக இருந்தன. அத்தொன்னகரில் இராஜ மாளிகைகள் இருந்த பகுதியை நோக்கி ஜனங்கள் திரள் திரளாகப் போய்க் கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் வயோதிகர்களும் வாலிபர்களும் சிறுவர்களும் கூட்டம் கூட்டமாகச் சென்றார்கள். சைவர்களும் வைஷ்ணவர்களும் புத்தர்களும் சமணர்களும் அக்கூட்டத்தில் கலந்திருந்தார்கள். கடும் விரதங்கள் கொண்ட காலாமுகர்கள் சிலரும் அக்கூட்டத்தில் ஆங்காங்கு காணப்பட்டார்கள். மக்களில் அநேகர் அழுது புலம்பிக் கொண்டு சென்றார்கள். பலர் பழுவேட்டரையர்களை வாயாரச் சபித்துக் கொண்டு சென்றார்கள்.

வாலிபர்கள் சிலர் ஆங்காங்கே கையில்கழிகளுடன் காணப்பட்டார்கள். அவர்கள் அவ்வப்போது ஒருவருடைய கழியை இன்னொருவர் தட்டி ஓசைப் படுத்திக் கொண்டு சென்றார்கள். கழி அடிபடும் ஓசை கேட்டதும் ''பழுவேட்டரையர்களின் தலையில் அப்படிப் போடு!'' என்று சிலர் மெதுவாகச் சொன்னார்கள். சிலர் அவ்வாறு சத்தம் போட்டும் கத்தினார்கள். சத்தம் போட்டுக் கத்தியவர்களில் காலாமுகர்கள் முக்கியமா யிருந்தார்கள்.

பழையாறையிலிருந்த முக்கியமான இராஜ மாளிகைகளின் முன் முகப்புகள் பிறைச் சந்திரன் வடிவமாக அமைந்திருந்தன. எல்லா மாளிகைகளுக்கும் சேர்ந்து முன் பக்கத்தில் விசாலமான நிலா முற்றம் இருந்தது. விசேஷமான சந்தர்ப்பங்களில் பதினாயிரக் கணக்கான மக்கள் கூடி நிற்கும்படியாக அந்த நிலா முற்றம் விசாலமா யிருந்தது. முற்றத்தைச் சூழ்ந்து வெளிப்புறத்தில் உயரமான மதிள் சுவர் இருந்தது. அந்த மதிள் சுவருக்கு மூன்று வாசல்கள் இருந்தன. ஒவ்வொரு வாசலிலும் சில அரண்மனைச் சேவகர்கள் காவல் புரிந்தார்கள்.

திரள்திரளாக வந்துகொண்டிருந்த கூட்டம் நிலா முற்றத்தின் மூன்று வாசல்களின் அருகிலும் வந்து சேரத் தொடங்கியது. விநாடிக்கு விநாடி கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. செய்தி கொண்டு வந்திருந்த இருவரையும் அவர்களை அழைத்து வந்த ஊர்ச் சேவகர்களையும் மட்டும் அரண்மனைக் காவலர்கள் உள்ளே விட்டார்கள். மற்றவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். ஆனால் வெகு நேரம் தடுத்து நிறுத்தி வைக்க முடியவில்லை. கூட்டத்தில் எங்கிருந்து கிளம்புகின்றன என்று தெரியாதபடி சில குரல்கள் 'உள்ளே போங்கள்! உள்ளே போங்கள்!' என்று கூவின. பின்னாலிருந்தவர்கள் முன்னாலிருந்தவர்களைத் தள்ளினார்கள். கடலின் அலைகள் ஒன்றையொன்று தள்ளிக் கொண்டு வந்து கடைசிப் பேரலையைக் கரையிலே போய் மோதும்படி செய்கின்றனவல்லவா? அது போலவே இந்த ஜன சமுத்திரத்திலும் நடந்தது.

முன்னாலிருந்தவர்கள் பின்னால் வந்தவர்களால் மோதப்பட்டு வாசற் காவல் புரிந்த சேவகர்களைத் தள்ளிக்கொண்டு உள்ளே புகுந்தார்கள். அவ்வளவுதான்; காவேரிக் கரையில் சிறிய உடைப்பு எடுத்தாலும் வரவரப் பெரிதாகி வெள்ளம் குபுகுபுவென்று பாய்வது போல் ஜனங்கள் நிலா முற்றத்தில் தடதடவென்று பிரவேசித்தனர். சிறிது நேரத்துக்குள் நிலா முற்றம் நிறைந்து விட்டது. ஆயிரக் கணக்கான மக்கள் அங்கே சேர்ந்து விட்டார்கள்.

இப்படி ஜனங்கள் கட்டுக் காவல்களை மீறி நிலா முற்றத்தில் புகுந்து கொண்டிருந்தபோது ஏற்பட்ட ஆரவாரத்தைத்தான் செம்பியன்மாதேவி மதுராந்தகனோடு பேசிக் கொண்டிருக்கையில் கேட்டார். குமாரனுடன் வாதாடுவதை அத்துடன் நிறுத்தி விட்டு அரண்மனை மேல் மாடத்தில் முன் முகப்புக்கு வந்து சேர்ந்தார். தெய்விகக் களை பொருந்திய அப் பெரு மூதாட்டியின் திருமுகத்தையும் கூப்பிய கைகளுடன் அவர் நின்ற சாந்தமான தோற்றத்தையும் பார்த்ததும் அந்த ஜன சமுத்

திரத்தின் ஆரவாரம் அடங்கியது. சில விநாடி நேரம் அங்கே நிசப்தம் குடிகொண்டிருந்தது.

''தாயே! எங்கள் இளவரசர் எங்கே? பொன்னியின் செல்வர் எங்கே? தங்கள் கண்ணுக்குக் கண்ணான அருள்மொழி வர்மர் எங்கே?'' என்று அக் கூட்டத்தில் சில குரல்கள் எழுந்தன. அவ்வளவுதான்; அந்த ஜன சமுத்திரத்தில் முன்னை விடப் பன்மடங்கு ஆரவாரம் கிளம்பி விட்டது.

செம்பியன் மாதேவி ஒன்றும் புரியாதவராகத் திகைத்து நின்றார். பழையாறை மக்களின் இதயங்களைக் கொள்ளை கொண்டிருந்த பொன்னியின் செல்வருக்கு ஏதோ ஆபத்து நேர்ந்து விட்டது என்பதை மட்டும் அறிந்தாள். அது என்ன ஆபத்து? எப்படி நேர்ந்தது? பழுவேட்டரையர்களே ஏதேனும் விபரீதமான காரியம் செய்து சோழ குலத்துக்கும் மதுராந்தகனுக்கும் அழியாத பழியை உண்டாக்கி விட்டார்களோ?

இச்சமயத்தில் தஞ்சாவூர்த் தூதர்கள் இடித்துப் பிடித்து ஜனங்களைத் தள்ளிக் கொண்டு முன்னால் வந்து சேர்ந்தார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு வந்த சேவகர்களில் ஒருவன், ''பெருமாட்டி! இவர்கள் தஞ்சாவூரிலிருந்து முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள்!'' என்றான். செம்பியன் மாதேவி ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கை அமர்த்தி விட்டுத் தூதர்களை நோக்கி ''என்ன செய்தி கொண்டு வந்தீர்கள்?'' என்று கேட்டார்.

''தாயே! மிகத் துயரமான செய்தி கொண்டு வந்திருக்கும் அபாக்கியசாலிகள் நாங்கள். சக்கரவர்த்தியின் கட்டளையின் பேரில் இளவரசர் அருள்மொழி வர்மர் இலங்கையிலிருந்து கோடிக் கரைக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்தார். வரும் வழியில் சுழிக் காற்றில் கப்பல் அகப்பட்டுக் கொண்டு விட்டது. துணையாக வந்த கப்பல் உடைந்து முழுகி விட்டது. அதிலிருந்தவர்களைக் காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்தார். பிறகு அகப்படவில்லை. கடலிலும் கடற்கரையெங்கும் தேடுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. சக்கரவர்த்தியும் மலையமான் மகளாரும் இச் செய்தியைக் கேட்டுப் பெருந்துயரில் ஆழ்ந்திருக்கிறார்கள். தங்களையும் மதுராந்தகத் தேவரையும் இளைய பிராட்டியையும் உடனே புறப்பட்டுத் தஞ்சைக்கு வரும்படி சக்கரவர்த்தி எங்கள் மூலம் செய்தி அனுப்பியிருக்கிறார்!''

இவ்வாறு தூதர்கள் கூறியது செம்பியன்மாதேவியின் காதிலும் விழுந்தது. அதே சமயத்தில் ஜனக் கூட்டத்தின் செவிகளிலும் விழுந்தது.

செம்பியன் மாதேவியின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. அதைப் பார்த்த ஜனங்கள் மேலும் 'ஓ' என்று கதறினார்கள்.

கூட்டத்தில் முன்புறம் இருந்தவர்களில் ஒருவர், ''தாயே! தாங்கள் தஞ்சைக்குப் போகக் கூடாது! இளைய பிராட்டியும் தஞ்சைக்குப் போகக் கூடாது. சக்கரவர்த்தியை இங்கே வரும்படி செய்ய வேண்டும்'' என்று கூவினார்.

''பொன்னியின் செல்வர் கடலில் முழுகி விட்டார் என்பது பொய். பழுவேட்டரையர்கள்தான் அவரைக் கொன்றிருப்பார்கள்!'' என்றார் இன்னொருவர்.

''மதுராந்தகரும் இனித் தஞ்சைக்குப் போகக் கூடாது. இங்கேயே இருக்க வேண்டும்!'' என்று இன்னொரு குரல் கேட்டது.

''இளைய பிராட்டி எங்கே? அவரை நாங்கள் பார்க்க வேண்டும்!'' என்று பல குரல்கள் கூவின.

செம்பியன் மாதேவி தன் அருகில் இருந்த சேடிகளில் ஒருத்தியைப் பார்த்து இளவரசியை அழைத்து வரச் சொன்னார்.

கீழே கூட்டத்தில் கலந்து நின்று கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானும் அதே சமயத்தில் அங்கிருந்து நகர்ந்து சென்றான். பழையபடி குறுக்கு வழியில் விரைவாகச் சென்று குந்தவை தேவி வானதியை மூர்ச்சை தெளிவித்துக் கொண்டிருந்த கொடி வீட்டைக் கண்டுபிடித்தான். வந்தியத்தேவனிடம் இளைய பிராட்டி கூறிய கடைசி வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே சென்று அரண்மனை முற்றத்தில் நடக்கும் அமர்க்களத்தைப் பற்றி அறிவித்தான்.

இளைய பிராட்டி வானதிக்குச் சைத்யோபசாரம் செய்யும் வேலையைப் பணிப் பெண்களிடம் ஒப்புவித்துவிட்டு, அவசரமாகக் கிளம்பினாள்.

* * *

இளைய பிராட்டி குந்தவை தேவி அரண்மனை மேல் மாட முகப்பில் செம்பியன்மாதேவியின் அருகில் நெருங்கியபோது அந்த மூதாட்டியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதைக் கவனித்தாள். அந்தக் காட்சி குந்தவையின் கண்களிலும் கண்ணீர் பெருகச் செய்தது. இதைக் கண்ட ஜன

சமூகம் மேலும் துயர சாகரத்தில் மூழ்கியது.

"பொன்னியின் செல்வர் கடலில் மூழ்க வில்லை. பழுவேட்டரையர்கள் கொன்று விட்டார்கள். அவர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!"

"சக்கரவர்த்தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருக்கிறார்கள். அவரை விடுவித்து அழைத்து வர வேண்டும். இளவரசி கட்டளையிட்டால் இந்தக் கணமே நாங்கள் புறப்படச் சித்தமா யிருக்கிறோம்."

இவ்வாறெல்லாம் அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் இளைய பிராட்டியைப் பார்த்துக் கூவினார்கள்.

குந்தவையின் மனம் தீவிரமாகச் சிந்தித்தது. இளவரசர் உயிரோடிருக்கிறார் என்ற உண்மையை இப்போது வெளியிடக் கூடாது. ஆனால் ஜனங்களையும் சமாதானப்படுத்தி அனுப்ப வேண்டும். அதற்கு ஒரு வழி தோன்றியது.

கண்ணில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஜனக் கூட்டத்தின் முன் வரிசையில் நின்றவர்களை இளவரசி நோக்கினாள். அதற்குள் ஆழ்வார்க்கடியானும் வந்தியத் தேவனும் அங்கே வந்து நின்று கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியானைப் பார்த்த இளைய பிராட்டி மேலே வரும்படி சமிக்ஞை செய்தாள். ஆழ்வார்க்கடியான் அவ்விதமே மேலே ஏறிச் சென்றான். அவனிடம் குந்தவை மெல்லிய குரலில் ஏதோ கூறினாள்.

ஆழ்வார்க்கடியான் ஜனங்களைப் பார்த்துக் கையமர்த்தினான். இடி முழக்கம் போன்ற பெரிய குரலில் கூறினான்: "பொன்னியின் செல்வர் இறந்திருப்பார் என்று இளைய பிராட்டியினால் நம்ப முடியவில்லை. முன்னொரு சமயம் காவேரித் தாய் இளவரசரை ஏந்திக் காப்பாற்றியது போல் சமுத்திர ராஜனும் அவரைக் காப்பாற்றியிருப்பார் என்று நம்புகிறார். நிமித்தக்காரனைக் கேட்டதில் அவனும் அப்படியே சொல்லுகிறானாம். இளவரசரைத் தேடிக் கண்டுபிடிக்க இளைய பிராட்டி தக்க ஏற்பாடு செய்வார். உங்களையெல்லாம் நிம்மதியாய் வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி கேட்டுக் கொள்கிறார்!"

இதைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டத்தில் ஒரு பெரிய ஆசுவாச நெடு மூச்சைப் போன்ற சத்தம் எழுந்தது.

"நிமித்தக்காரன் எங்கே? அவன் வாயினால் நாங்களும் அந்த நல்ல செய்தியைக் கேட்கிறோம்" என்றார் ஒருவர்.

இதுதான் சமயம் என்று வந்தியத்தேவன் தாவிக் குதித்து மேல் மாடத்துக்குச் சென்றான்.

ஆழ்வார்க்கடியான் அருகில் போய் நின்று கொண்டு, "இளவரசருக்குப் பெரிய கண்டம் நேர்ந்தது உண்மைதான். ஆனால் அவருடைய உயிருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லை. விரைவில் கிடைத்து விடுவார்!" என்றான்.

"உனக்கு எப்படித் தெரியும்?" என்றது ஒரு குரல்.

"நான் நிமித்தக்காரன். கிரஹங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்து அறிந்து கொண்டேன். நிமித்தங்களைப் பார்த்தும் தெரிந்து கொண்டேன்."

"பொய்! நீ சொல்வது பொய்! நீ நிமித்தக்காரன் அல்ல! நீ ஒற்றன்!" என்றது அதே குரல்.

வந்தியத் தேவன் அந்தக் குரலுக்கு உரியவனைக் கவனித்துப் பார்த்தான். அவன் வைத்தியர் மகன் என்பதை அறிந்து கொண்டான்.

"பைத்தியக்காரா! என்னையா ஒற்றன் என்று சொல்கிறாய்? நான் ஒற்றனாயிருந்தால், யாருடைய ஒற்றன்?" என்று கேட்டான்.

"பழுவேட்டரையர்களுடைய ஒற்றன்!" என்று வைத்தியர் மகன் பளிச்சென்று மறுமொழி கூறினான்.

"என்ன சொன்னாய்?" என்று வந்தியத் தேவன் கர்ஜித்தான்.

ஜனங்கள் கீழே நின்ற நிலா முற்றத்திலிருந்து வந்தியத் தேவன் நின்ற மேல் மாடம் பன்னிரண்டு அடி உயரத்தில் இருந்தது. அதை அவன் பொருட்படுத்தாமல் மேல் மாடத்திலிருந்து வைத்தியர் மகன் பேரில் பாய்ந்தான்.

இருவருக்கும் துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. சண்டை என்றால் எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் வேடிக்கை பார்ப்பதில் பிரியம் உண்டு அல்லவா?

வந்தியத் தேவனுக்கும் வைத்தியர் மகனுக்கும் சண்டை நடந்த இடத்தைச் சுற்றி இடைவெளி விட்டு ஜனங்கள் வட்ட வடிவமாக நின்று வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள்.

மேல் மாடத்தில் இருந்தவர்கள் கவலையுடன் அதை நோக்கினார்கள்.

ஜனக் கூட்டத்தில் பெரும்பாலோர் விஷயம் இன்னதென்று தெரிந்துகொள்ளாமலே முன்னை விட அதிகக் கூச்சல் போடத் தொடங்கினார்கள்.

இச்சமயத்தில் வாசற்பக்கத்திலிருந்து சங்க நாதமும் கொம்புகளின் முழக்கமும் கேட்டன.

"முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வருகிறார். வழிவிடுங்கள்!" என்ற குரல் முழக்கம் கேட்டது.

அந்தப் பெருங் கூட்டத்தில் முதன் மந்திரிக்குத் தானாகவே வழி ஏற்பட்டது.

**(தொடரும்)**




வள்ளலாரைப் பற்றிப் பேசுங்கள் என்று திரு ம.பொ. சிவஞானம் அவர்களிடம் சொல்லி விட்டால் அவர் நாளொன்று மூன்றுமணி நேரம் விதம் தொடர்ந்து முப்பது நாட்களுக்குச் சலிப்பின்றியும் கேட்பவருக்கு அலுப்பின்றியும் பேசக் கூடியவர்தாம். அந்த அளவு ஆழ்ந்த ஈடுபாடு அவருக்கு வள்ளலாரிடம் உண்டு.

ஆழ்ந்த புலமை வேறு. பரவலான புலமை வேறு. ஆழ்ந்த புலமை உள்ளவரிடம்தான் பண்பாடு மிளிரக் காணலாம். பரவலான புலமை பெற்றோரிடம் செருக்கைத்தான் பார்க்க முடியும் என்று ரசிகமணி டி.கே.சி. கூறுவதுண்டு. பத்துப் பட்டதாரிகளை ஒன்றாகச் சேர்த்தாலும் பெற முடியாத ஆழ்ந்த புலமையையும் அதன் விளைவான பண்பட்ட உள்ளத்தையும் கொண்ட திரு ம.பொ.சி.க்கு உரிய மதிப்பைத் தந்து சென்னை பல்கலைக் கழகம் பட்டதாரி அல்லாத அவரை இந்த ஆண்டு கல்வி நினைவுச் சொற்பொழிவுக்குத் தேர்ந்தெடுத்துத் தன் மதிப்பை உயர்த்திக் கொண்டது. ஆயிரக்கணக்கான கூட்டங்களில் பேசியிருக்கிறார் திரு ம. பொ. சி. ஆயினும் தமது ஆப்த நண்பரின் நினைவாக ஏற்படுத்தப் பட்ட இந்தச் சொற்பொழிவை நிகழ்த்துவதில் அறிவும் பல்கலைக் கழகக் கோட்டையை வெற்றி கொண்டு நிகழ்த்துவதில் அலாதியான ஒரு பெருமிதமும் பூரிப்பும் கண்டார் என்பதை அவர் முகம் காட்டியது.

துணைவேந்தர் சுந்தரவடிவேலு தலைமை தாங்கப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் மு. வரதராசன் அருகிலிருக்க அவ்வை டி. கே. ஷண்முகம் வள்ளலார் பாடல்களைத் துதி கீதமாகப் பாட முதல் நாள் சொற்பொழிவைத் தொடங்கினர்.

திரு ம. பொ. சி. "வள்ளலார் வகுத்த வழி" குறித்துப் பேசுகையில் வள்ளலாரின் தனித்தன்மைகளை — அவருக்கு முன்னும் பின்னும் யாரும் உணர்த்தாத விஷயங்களை— விளக்கிச் சொன்னது புதுமையாகவும் சிறப்பாகவும் இருந்தது.

மெக்காலே தமது கல்வித் திட்டத்தின் மூலம் இந்திய நாட்டை மட்டுமின்றி இந் நாட்டு மக்களின் ஆன்மாவையே அடிமைப் படுத்திவிடத் திட்டவட்டமாகச் சூழ்ச்சி புரிந்த தருணத்தில் அதனை முறியடிக்கத் தோன்றிய மகான்கள் பலர். ராஜாராம் மோகன்ராய், ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றோர் இந்து தேசியத்தைப் பரப்பி மக்களின் ஆன்மாவைக் காக்க நினைத்தனர். ஆனால் வள்ளலார் இந்திய தேசியத்தை வலியுறுத்தினர், தமது எம்மதமும் சம்மதம் என்ற கொள்கை மூலம்.

இதை ம. பொ. சி. ஒரு மணி நேரத்துக்கு மேலாகப் பல மேற்கோள்களைக் காட்டி விளக்கியவிதம் மெய்சிலிர்க்கவைப்பதாக இருந்தது.

சொற்பொழிவுத் தொடரின் இரண்டாம் நாள் வெள்ளிக்கிழமை. காந்திஜியும் வள்ளலாரும் அமரநிலை எய்திய அதே கிழமை, அதே தேதி. ஜனவரி 30. ஆகவே ம. பொ. சி.யின் சொற்பொழிவில் அன்று அண்ணலும் வள்ளலும் மாறி மாறித் தோன்றிக் கருத்து மழை பொழிந்ததில் வியப்பில்லை.

வள்ளலார் மதங்களின் எதிரி அல்ல; மதங்களுக்கு அப்பாற்பட்டு உயர்ந்து நின்றவர். வழிபாட்டு முறைகளை விலக்கச் சொன்னவரல்ல, அதற்கும் மேம்பட்ட நிலையை விளக்கிச் சொன்னவர். புறச் சின்னங்களை வெறுத்தவரல்ல; உண்மைப் பரம்பொருளை விரும்பக் கற்றுத் தந்தவர். மெய்ஞ்ஞானத்தின் மூலம் விஞ்ஞானத்தையும் உணர்ந்த வள்ளலார், அண்ட பேரண்டத்தில் பற்பல உலகங்களின் இயக்கங்களை அறிந்து, அவற்றுக்கெல்லாம் ஆதி முதல்வனாகத் தில்லை நடராஜப் பெருமானை உருவகப்படுத்தி மனத்தை அவன்பால் லயிக்க விட்டவர். பசித்தவனுக்கு ரொட்டி தான் கடவுள் என்று காந்தி பிற்காலத்தில் எண்ணியது போலவே வள்ளலாரும் அன்று கருதித்தான் அணையாத தீ மூட்டி என்றும் இல்லையெனாது பரிபூர உணவு படைக்க வழி செய்தார். ஜீவகாருண்யத்தை வலியுறுத்தினர். தம்மை எதிர்த்தவர்களை அவர், பெயர் சொல்லித் தாக்கியது கூட இல்லை; அவர்களது கருத்துக்களைத் தக்க ஆதாரங்களுடன் மறுத்துரைத்ததுடன் நின்றார். வள்ளலாரின் ஜீவகாருண்யப் பண்பு அவ்வளவு விரிவானது.

மூன்றாம் நாளன்று வள்ளலாரின் தமிழ்ப் பற்றையும், வடமொழிப் புலமையையும் எடுத்துக் காட்டினர் திரு ம. பொ. சி. தமக்கு முன் தோன்றிய புலவர்களை—அவ்வை வள்ளுவர் முதலானோரை வள்ளலார் எவ்வளவு போற்றி வணங்கியிருக்கிறார் என்பதைச் சொன்னர். கவிதைகள் இயற்றுகையில் வள்ளலார் வார்த்தைகளைத் தேடிப் போகவில்லை; பொருத்தமான சொற்கள் அவரை நாடி வந்தன. அவரது தமிழ் மொழிப் பற்று தாய் மொழி என்பதால் மட்டும் எழுந்ததல்ல; தெய்வத்தைக் காணவும் அது உதவியது.

இவ்வாறெல்லாம் திரு ம. பொ. சி. வள்ளலார் வகுத்த வழியைச் சுட்டிக் காட்டிய போது பல்கலைக் கழக நூற்றாண்டு மண்டபத்தில் இதுவரை நிகழாத ஓர் அதிசயம் நடந்தது. இது போன்ற நினைவுச் சொற்பொழிவுகளின்போது காண முடியாத கூட்டம் மூன்று நாட்களும் மண்டபத்தில் நிறைந்திருந்தது!

— குட்டிக் கிருஷ்ணன்

# ராமாயணம்

## ராஜாஜி

### 45. சூர்ப்பனகை

**ப**ஞ்சவடியை அடைந்ததும், ''பார்த்தாயா, லக்ஷ்மணா! எவ்வளவு மனோகரமான இடத்தை அகஸ்தியர் நமக்கு அமைத்துக் கொடுத்தார்!'' என்று அங்கு கண்ட அழகை மெய்மறந்து அனுபவித்து ராமன் பேசுகிறான்:

''நானும் நீயும் சீதையும் இந்த இடத்தில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு எவ்வளவு காலமேனும் சந்தோஷமாக இருக்கலாம். மலைகளைப் பார்! அதிக தூரத்திலுமில்லை. அதிக அண்மையிலுமில்லை. மான் கூட்டங்களைப் பார். மரங்களும் மரங்களில் விளையாடும் பறவைகளின் இனிய நாதங்களும், புஷ்பங்களும் தண்ணீரும் நீர்ப்பறவைகளும் மணலும் எல்லாம் எவ்வளவு ரமணீயமாக இருக்கின்றன. இங்கே நீ ஒரு சரியான இடத்தைப் பார்த்து ஆசிரமம் அமைப்பாய்'' என்று லக்ஷ்மணனுக்குச் சொன்னான்.

ஓர் இடத்தைக் கண்டு லக்ஷ்மணன் மிகச் சாமர்த்தியமாக ஆசிரமம் கட்டி முடித்து விட்டான். இங்கே வால்மீகி முனிவர் நின்று லக்ஷ்மணனுடைய சாமர்த்தியத்தையும் சுறுசுறுப்பையும் விளக்குகிறார். ஆசிரமம் கட்டினதையெல்லாம் நன்றாக விளக்குகிறார். மண் சுவர் எழுப்பியது, மேலே கூரை பரப்பியது எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்லுகிறார். கட்டி முடிந்ததும் ராமன் தம்பியை அணைத்துப் பரவசமாகி, ''லக்ஷ்மணா! நீயே எனக்குத் தகப்பன் ஆனாய்!'' என்று சொல்லி உள்ளம் உருகி ஆனந்தக் கண்ணீர் விட்டான்.

அரண்மனையில் வசித்த இராஜ குமாரன் இதையெல்லாம் எப்படி, எங்கே கற்றான் என்று நாமும் ஆராய வேண்டும். காட்டில் சாமான்களைத் தேடி யடைந்து குடிசையைக் கச்சிதமாகக் கட்டுவதற்கு வேண்டிய அறிவும் பயிற்சியும் அந்தக் காலத்தில் அரச குமாரர்கள் பெறும் கல்வியில் அடங்கி யிருந்தன என்று கண்டு கொள்ளலாம்.

* * *

**ப**ஞ்சவடி ஆசிரமத்தில் ராமனும் சீதையும் லக்ஷ்மணனுடைய அன்புப் பணியைப் பெற்றுச் சுகமாகவே காலம் கழித்தார்கள்.

ஒரு நாள், முன் பனிப் பருவ ஆரம்பத்தில் மூவரும் அதிகாலையில் கோதாவரி நதிக்கரை நோக்கி வழக்கப்படி சென்றார்கள். குளித்து, காலை வந்தனம் முடித்துப் பாத்திரங்களைச் சுத்தி செய்து தங்களுக்கு வேண்டிய ஜலம் எடுத்துப் போவதற்காகச் சென்றார்கள். அந்தப் பருவத்தின் விசேஷங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே போனார்கள்.

மாதங்களில் மார்கழி மாதமே சிறந்தது என்பது நமது முன்னோரும் பெரியோரும் கண்ட உண்மை. லக்ஷ்மணன் பரதனை நினைத்துக் கொண்டான்.

''இந்தச் சமயத்தில் அன்புக்குரிய பரதன் விரதங்களை அனுசரித்து வருவான். எவ்வளவு சுகமாக இருக்கவேண்டியவன். நாம் வனம் சென்றுவிட்டோம் என்று தானும் கஷ்டமான விரதங்களை மேற்கொண்டிருக்கிறான்



## இந்திரா காந்தி முண்டாசு கட்டிக் கொண்டால் எப்படி இருக்கும்?

(33ம் பக்கம் பார்க்க)

அவனை நினைக்க நினைக்க என் உள்ளம் வருத்தம் அடைகிறது. ஐயோ பாவம், சாப்பாட்டைக் குறைத்துக் கொண்டு இந்தக் குளிர் காலத்திலும் தரையில் படுப்பான். குளிரில் சரயூ நதியில் குளிக்கப் போவான். அண்ணா! நாம் எவ்வளவு நல்ல சகோதரனைப் பெற்றோம். அவன் பேச்சு, அவன் நடை, அவன் உள்ளம் எல்லாம் எவ்வளவு சுத்தம்! அனுபவிக்க வேண்டிய சுகங்களையெல்லாம் விட்டு விட்டு நமக்காக விரத வாழ்க்கை நடத்துகிறான். அவனை நினைத்தால் மிகவும் துக்கமாக இருக்கிறது. நம் தந்தையை அவன் எல்லா விதத்திலும் ஒத்திருக்கிறான். ஜனங்கள் தாயைப் போல் மகன் இருப்பான் என்று சொல்லுவார்கள். அது பரதன் விஷயத்தில் தவறாக இருக்கிறது. இவன் தந்தையின் சுபாவமே கொண்டிருக்கிறான். இந்தக் கைகேயி ஏன் இப்படிக் குரூர சுபாவம் பெற்றாள்? அவளுக்கு எப்படி இவ்வளவு நல்ல குமாரன் பிறந்தான்?'' என்று லக்ஷ்மணன் பொங்கி வந்த நினைவுகளைப் பேசிக் கொண்டே போனான்.

''தம்பி! கைகேயியைத் தூஷிக்க வேண்டாம். பரதனைப் பற்றிச் சொல். நம் தந்தையைப் பற்றிச் சொல். ஆனால் நம் சிறிய தாயாரைப் பற்றிக் குறை சொல்ல வேண்டாம். பரதனைப் பற்றி நீ சொன்னதெல்லாம் உண்மை. நான் எவ்வளவு நிச்சய புத்தியுடன் ஊரை மறந்து வனவாசம் செய்தாலும் பரதன் ஞாபகமாகவே இருக்கிறது. அவனை இப்போதே பார்க்க வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. லக்ஷ்மணா! நாம் எப்போது அவனைப் பார்த்து மகிழ்வோம்? நாம் நால்வரும் மறுபடியும் எப்போது ஓரிடத்தில் இருப்போம்? பரதனுடைய அமிருதம் போன்ற பேச்சு என் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது.''

இவ்வாறு மார்கழி மாதத்தில் ஊரையும் பரதனையும் நினைத்துக் கொண்டு அதிகாலையில் கோதாவரியில் ஸ்நானம் செய்தார்கள். இந்தக் கட்டம் படிக்கும் போது நம்முடைய உள்ளம் கரைகிறது.

பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணம் பண்ணி விட்டு, சூரிய நமஸ்காரம் செய்து விட்டு, மகாதேவனைப் போல் ஜடை தரித்த ராமன் தெய்வீக ஒளி வீச சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ஆசிரமம் திரும்பிப் போனான்.

காலையில் செய்ய வேண்டிய காரியங்களையெல்லாம் செய்து விட்டு விச்ராந்தியாக ஆசிரமத்தில் உட்கார்ந்து கொண்டு, புராண இதிகாசக் கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் ராமனுடைய முகம் சித்திரை மாதத்துப் பூரணச் சந்திரனைப் போல் பொலிவு பெற்றுப் பிரகாசித்தது. பேசிக் கொண்டிருந்த கதையில் மனம் லயித்திருந்த அந்தச் சமயம் திடீரென்று ஒரு ராக்ஷஸ ஸ்திரீ அங்கே வந்து சேர்ந்தாள். அவள் தான் சூர்ப்பனகை; ராவணனுடைய சகோதரி.

தேவலோகவாசி ஒருவனைப் போல் அழகிய வடிவம் கொண்ட ராஜகுமாரனை அவள் பார்த்தாள். அவலக்ஷணமே உருக்கொண்ட அந்த அரக்கி மன்மதனுடைய அழகு பெற்ற ராமச்சந்திரனைப் பார்த்ததும் காம பரவசமாகிப்போனாள். மகா விகாரமான அவள், காமத்தால் பீடிக்கப்பட்டுப் பேச ஆரம்பித்தாள்:

''தவம் செய்பவர்களைப்போல் ஜடை தரித்துக் கொண்டு, மனைவியையும் அழைத்துக் கொண்டு, வில்லும் அம்புமாக ராக்ஷஸருடைய காட்டுக்கு வந்திருக்கும் நீ யார்? எதற்கு வந்திருக்கிறாய்? உண்மையைச் சொல்வாய்!'' என்றாள்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் தன் பெயர், ஊர், சரித்திரம் முழுவதும் சரியாகச் சொல்லி விட்டு, கேட்டவருடைய குலம், காரியம் ஆகியவற்றைக் கேட்பது அக்காலத்துப் பண்பாடு, அந்தப் பண்பாட்டில் பழகின ராமன்,

''தேவர்களுக்குச் சமானமான சௌரியம் பொருந்திய தசரத மகாராஜனுடைய மூத்த குமாரன் நான். என்னை ராமன் என்று அழைப்பார்கள். இவன் என் தம்பி லக்ஷ்மணன். இவள் என் மனைவியாவாள். இவள் பெயர் சீதை. என் தாயும் அரசனான தந்தையும் சொல்லியனுப்பியபடி தருமத்தை விரும்பி இந்தக் காட்டில் வனவாசம் செய்ய இங்கே வந்திருக்கிறேன். தயவு செய்து சொல்வாய், நீ யார்? எந்தக் குலம்? உன் சொரூபத்தைப் பார்த்தால் ராக்ஷஸப் பெண் என்று தோன்றுகிறது. இவ்விடம் என்ன காரியம் பற்றி வந்தாய்? சரியாகச் சொல்வாய்'' என்றான்.

(தொடரும்)

# மோகினி ஆட்டத்தில் முழு நடனம்



கேரள பிராந்திய நடனங்கள் என்றதும் கதகளிதான் எல்லோருடைய கவனத்துக்கும் வரும். நாட்டிய நாடகங்களாக, பிரத்தியேக உடை அலங்காரங்களுடன் செண்டு போன்ற பிரத்தியேக வாத்தியங்களுடன் கதகளியைக் கண்டு நாம் மகிழ்கிறோம். மோகினி ஆட்டம் என்ற வகையும் கேரள நாட்டு சாஸ்திரிய நடன வகைகளில் ஒன்று என்பதை அபூர்வமாகச் சில நிகழ்ச்சிகளில் மட்டுமே கண்டு களிக்கலாம். வசந்த கேளி, இந்த வகை நடனத்துக்கு ஒரு ''சாம்பிள்''. ஆனால் மோகினி ஆட்டத்தையே முழு நடன நிகழ்ச்சியாக அரங்கத்தில் ஆடி, இந்த நடன வகையில் இருக்கிற தனிச் சிறப்புக்களை வெளிக் கொணர்ந்து காட்ட முடியுமா என்பதைச் சமீப காலத்தில் யாரும் செயல்படுத்திக் காட்டியதாகத் தெரியவில்லை. இந்தத் துறையில் புகுந்து அண்மையில் நாரத கான சபை ஆதரவில் சங்கீத வித்வத் சபை மண்டபத்தில் மோகினி ஆட்டத் தனி நிகழ்ச்சியை நடத்தி ஒரு புதுமையை உண்டாக்கினார் ஸ்ரீமதி கனக் ரேலே என்ற பம்பாய் மாநிலப் பெண்மணி. புதுமை முயற்சிக்காக அவருக்குப் பாராட்டு செலுத்த வேண்டும்.

அதற்கான தகுதியைப் பிரயாசைப்பட்டுத் தேடிக் கொண்டுள்ளார், ஸ்ரீமதி கனக்ரேலே. உயர்ந்த ஆங்கிலப் படிப்பு; இங்கிலாந்தில் சட்டக் கல்வி கற்று லாகவமாக ஆங்கிலத்தில் பேசும் திறமை; ''பாஞ்சாலி'' பணிக்கரிடம் கதக்களி நடனங்களில் விசேஷப் பயிற்சி; மோகினி ஆட்ட வகைகளில் ஆராய்ச்சிகள் செய்து கட்டுரைகள் வழங்கும் ஆற்றல்; தளராத உழைப்பு — இத்தியாதி தகுதிகளைக் கொண்டு முழு நடன நிகழ்ச்சிக்குரிய உருப்படிகளையும் அவரே வகைப்படுத்தியிருக்கிறார்.

சொல்லுக் கட்டு — பரத நாட்டிய அலாரிப்பைப் போன்றது — 'பாவயாமி' என்ற ராமாயண கீர்த்தனை; ஜயதேவரின் 'பிரளய பயோதிஜலே' என்ற அஷ்டபதி; 'சிருங்கார லஹரி'யில் ஒரு ஜாவளி—ஆமாம், 'இதி நீது' தான் — ஒரு தில்லானா — இப்படி ஒரு நிகழ்ச்சி நிரல். இவையெல்லாம் பரத நாட்டிய நிகழ்ச்சியில் காணப்படுபவைதாம். இவற்றுக்கு நிருத்த நிருத்ய, பாவங்களும்கூட, விஸ்தாரமாகப் பரத நாட்டிய நிகழ்ச்சிகளில் காணலாம். மோகினி ஆட்டத்தில் இந்த வகையில் எல்லா அம்சங்களும் சற்று அடக்கமாகவே இருந்தன. சில முத்திரைகள் சில அங்க அசைவுகள், சில அபிநயங்கள் மாறி மாறி வந்து கொண்டிருந்தன. சாய்வுக் கொண்டையும், ''புஷ்பசரமும், வெள்ளை உடை அணியும்'' கேரள நாட்டுச் சம்பிரதாயத்தை வலியுறுத்தின. அபிநயங்கள் குறைவாக இருந்தாலும் கச்சிதமாக இருந்தன. அஷ்டரசங்களுக்குப் பரத நாட்டிய சாஸ்திர சுலோகங்களைப் பின்னணியாகக் கொண்டு அபிநயங்கள் பிடித்தது ரசிக்கும்படியாக இருந்ததுடன் பரதக் கலையின் பிரிவுதான் மோகினி ஆட்டமும் என்பதை நினைவூட்டியது. ஒரு ஹிந்தி கஜலும் நிகழ்ச்சியில் இடம் பெற்றிருந்தது.

நடனக் கலை மூலம் நாட்டில் ஒற்றுமை வளர்க்கும் விதமாகக் கேரள நாட்டு மோகினி ஆட்டத்துக்கு பம்பாய் பிராந்தியத்தில் மவுசை உண்டாக்க முயன்று வருகிறார் ஸ்ரீமதி கனக்ரேலே. அவர் முயற்சி ஓங்கட்டும்.

— எம். எஸ். வெல்லசாமி



# பிரிட்டானியா
# நீஸ்
## பிஸ்கட்டுகள்




தேங்காய் கலந்தவை!
சர்க்கரை பூசப்பட்டவை!




மொரமொரப்பானவை
சுவையானவை






என்றுமே உயர்தரம்

BBC-5397

# ரகுபதி ராகவ

# மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

17-(I)



சிலர் எண்ணுகிறார்கள், சொல்லியும் வருகிறார்கள். கடவுள் என்கிற தத்துவம் மனிதனுடைய கற்பனையே என்று. மனிதனுடைய சிந்தனையில்தான் ஆண்டவன் தோன்றினான் என்று அவர்களுடைய வாதம். இந்த வாதத்தை ஒப்புக்கொண்டால் கடவுள் மட்டுமே அல்ல, உலகத்தில் எந்தப் பொருளுமே மனிதனுடைய உள்ளத்தில் தோன்றிய ஒரு தோற்றமாகும். பூத உலகில் பிண்டமாகத் தோற்றம் காட்டும் ஒவ்வொரு பொருளும் உண்மையில் நம் உள்ளத்தில்தான் நிற்கிறது. அனைத்தும் நம்முடைய மனத்தில் உண்டான கற்பனையும் பாவமுமே என்று வைத்துக் கொள்ள வேண்டியதாகும். ஒரு மரம் நம் முன் நிற்பதற்கு நம்முடைய மனத்தைத் தவிர்த்து வேறு என்ன சான்று உண்டு? பஞ்சேந்திரியங்களினால் மரம் இருப்பதைக் காண்கிறோம். அந்த இந்திரிய உணர்ச்சி நம் மனத்துக்குள் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியே அல்லவா? எவ்விதப் பிரமாணமும் முடிவில் மனிதனுடைய உள்ளத்தில் நிகழும் நிகழ்ச்சியே அன்றி வேறில்லை. ஆனபடியால் கடவுள் இருப்பது நம்முடைய உள்ளத்துக்குள்தான் என்றால் பூத உலகம் அனைத்துமே நம் உள்ளத்துக்குள்தான் நிற்கிறது. இப்படி வைத்துக் கொண்டாலும் சேதனர்களாகிய நாம், நம்முடைய உணர்ச்சியில் எது பிண்டமாகத் தோன்றுகிறதோ, எது உண்மையாகத் தோன்றுகிறதோ, எது வெளியுலகத்தில் ஒரு பொருளாகத் தோன்றுகிறதோ, அதை உண்மையாகவே வைத்துக் கொண்டுதான் வாழ்க்கை நடத்த வேண்டும். இது ஒரு மரத்திற்கும் பொருந்தும், ஒரு வீட்டுக்கும் பொருந்தும், மகனுக்கும் பொருந்தும், விரோதிக்கும் பொருந்தும், கடவுளுக்கும் பொருந்தும். உண்மை யென்று நாம் வைத்துக் கொண்டிருப்பது எதுவும் அந்த அளவிலேதான் உண்மை. நம்முடைய மனத்தைத் தவிர உண்மையை அறிய வேறு சாதனம் இடையாது. மனத்தைத் தாண்டிச் சென்று ஒரு அத்தாட்சி பெற முடியாது.

ஆகையினாலேதான் என்னுடைய அந்தராத்மாவின் உண்மை என்னுடைய தேகத்தின் உண்மையைப் போன்றதே என்று வைத்துக் கொண்டு வருகிறேன். ஏன்? என்னுடைய தேகத்தின் உண்மையைக் காட்டிலும் நிச்சயமாகவே நான் என் அந்தராத்மாவின் கேட்கும் குரல் எனக்கு உண்மையாகும். அது என்னை எப்போதும் பொய்த்ததில்லை. ஏன்? மற்றவர்களுக்கும் அது பொய்யாகவில்லை.

மேலும் சொல்கிறேன்: உண்மையில் நம் அந்தராத்மாவின் குரலைக் கேட்க விரும்புகிறவர்கள் எவருக்குமே அந்த ஒலி கேட்காமல் போகாது. ஒவ்வொருவனுடைய உள்ளத்திலுமே அது பேசுகிறது. நம்முடைய செவிட்டுத்தனத்தை நாம் குறைத்துக் கொள்ள வேண்டும். அதற்கு அப்பியாசம் வேண்டும்.

(ஹரிஜன் 8-7-33

# உருவத்தில் சிறியவர் தீரத்தில் சிறந்தவர்

பள்ளிக்கூட விளையாட்டு மைதானத்தில் சிறுவர் கால் பந்து விளையாடிக் கொண்டிருந்தனர். பலமாக உதைக்கப்பட்ட பந்து பள்ளிக்கூட காம்பவுண்டு சுவர் தாண்டித் தெருவுக்குப் போய்விட்டது. பாதாளச் சாக்கடையின் ''மான்ஹோல்'' என்ற துவாரம் மூடப்படாமல் திறந்து கிடந்தது. பந்து அதற்குள் விழுந்தது. குப்பையும், சகதியும் மேலாகக் கிடந்ததால், அதன் பதினொரு அடி ஆழம் தெரியவில்லை. மேலே சகதியின் இடையில் மிதந்து கொண்டிருந்த பந்தை எடுக்க ஜோனிலாலின் நண்பன் இறங்கிவிட்டான். இறங்கியவன் கீழே கீழே இழுக்கப்பட்டான். சாக்கடைத் தண்ணீரில் அவன் மூழ்கிப் போவதைப் பார்த்தான் ஜோனிலால். உடனே நண்பனைக் காப்பாற்றத் துவாரத்தின் விளிம்பில் உட்கார்ந்து காலை விட்டான். நண்பனும் காலைப் பற்ற முடியவில்லை. உடனே ஜோனிலால் நண்பனுக்கு எட்டும் வரை தன் உடலையும் பள்ளத்தில் இறக்கினான். மேலே இருந்த நண்பர்களுக்கு ஜோனிலாலின் கைகள் மட்டும் தான் கிடைத்தன. அந்த அளவுக்குப் பள்ளத்தில் இறங்கினான். மூழ்கிக்கொண்டிருந்த சிறுவன் ஜோனிலாலின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். மேலேயிருந்த நண்பர்கள் ஜோனிலாலின் கைகளைப் பிடித்து மேலே இழுத்தார்கள். இப்படி ஜோனிலால் தன் உயிரையும் மதிக்காமல் நண்பனைக் காப்பாற்றினான் !

● ரயில் பாதையில், எதிரில் வந்து கொண்டிருந்த ரயிலைக் கவனிக்காமல் நான்கு வயதுக் குழந்தை நடந்து போய்க் கொண்டிருந்தது. குழந்தைக்கு நேரவிருந்த ஆபத்தைக் கணத்தில் உணர்ந்தாள் பெங்களூரைச் சேர்ந்த நரசம்மா என்ற சிறுமி. தன் உயிரையும் பொருட்படுத்தாமல் அந்த நான்கு வயதுக் குழந்தையைத் தண்டவாளத்தின் மீதிருந்து இழுத்து வந்து காப்பாற்றினாள் !

● ஒரு குருடி 35 அடி ஆழமுள்ள கிணற்றில் விழுந்து விட்டாள். இதைப் பார்த்த ஜாயி தாமஸ் என்ற சிறுவன், ஓடிப் போய்த் தானும் கிணற்றில் குதித்து விட்டான். கிணற்று நீரில் மூழ்கிக் கொண்டிருந்த கிழவியை மேலே இழுத்து, அவள் மூச்சு மட்டும் விடுவதற்கு வசதியாக மூக்கைத் தண்ணீருக்கு வெளியே இருக்கும்படி வைத்திருந்து அவள் உயிரைக் காப்பாற்றினான். அதற்குள் உதவி வந்தது. இச்சிறுவன் ஜாயி தாமஸ் திருவனந்தபுரத்தைச் சேர்ந்தவன். பதினொரு வயது.

● இம்பாலில் தனது வீட்டுக்குப் பக்கத்திலிருந்த குட்டையில் விழுந்துவிட்ட சின்னஞ் சிறு பையனைக் காப்பாற்ற ஆறே வயதான சாந்திபாலா தேவி என்ற சிறுமி முற்பட்டாள். சாந்திபாலாவுக்கு நீந்தத் தெரியாது. எனினும் மூழ்கிக் கொண்டிருந்த சிறுவனின் சட்டைக் காலரை இழுத்துப் பிடித்துக் கொண்டே, ''அப்பா! சின்னப் பையன் மூழ்கிக் கொண்டிருக்கிறான், காப்பாற்று !'' என்று கத்தினாள். குளத்தின் கரையிலிருந்தவர்கள் சாந்தி பாலாவின் குரல் கேட்டு ஓடி வந்து காப்பாற்றினார்கள்.

● கல்கத்தாவில் தனது வீட்டுக்குப் பக்கத்திலிருந்த கடையில் திருடர்கள் நள்ளிரவில் புகுந்து ரூ. 20,000 பெறுமான சாமான்களுடன் டாக்ஸியில் ஓடி மறைவதைப் பார்த்துக் கொண்டிருந்தான் பூஷன் சர்க்கார் என்ற சிறுவன். வயதில் சிறுவன் ஆயினும் அவனுக்கு நல்ல சமயோசித புத்தி இருந்தது. டாக்ஸி எண்ணைக் குறித்துக் கொண்டான். அருகிலிருந்த போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் செய்தான். நகர முழுவதிலும் தேடுவதற்குப் போலீஸ் துப்பறியும் இலாகா உடனே ஏற்பாடு செய்தது. ஒரு மணி நேரம் கழித்து, இந்தச் சிறுவனிடம் முழு விவரம் அறியப் போலீஸ்காரர்கள் வந்தனர். அப்போது அந்த டாக்ஸி அவ்வழியே மீண்டும் செல்வதைச் சுட்டிக் காட்டினான். உடனே போலீஸ்காரர்கள் திருடர்களைப் பிடித்து, கொள்ளை போன பொருளையும் மீட்டனர்.

● பதினேழு வயதான நாராயண் பிரசாத் கட்டாக்கைச் சேர்ந்த சிறுவன். தான் வசிக்கும் தௌலதாபாத் என்ற பகுதியில் தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்த வீட்டிலிருந்து இரு குழந்தைகளைக் காப்பாற்றி வெளியே கொண்டு வந்தான். இம்முயற்சியில் அவன் தீப்புண்களால் வேதனை உற்றான்.

● யாருடைய காலை எப்போது, எப்படி வாரி விடலாம் என்றும், பணமும் பதவியும் எவ்வாறெல்லாம் அடையலாம் என்றும் சதா எண்ணி வருவோரைப் பற்றித்தான் அதிகமாகக் கேள்விப்படுகிறோம். ஈனச் செயல்கள் மலிந்து கோழைத்தனம் வளர்ந்துவரும் இந்நாளில் இளையபாரதத்தினரின் இத்தகைய வீர தீரச் செயல்களால் நமது இதயம் பூரிக்கிறது. வாழ்க இந்த இளம் பாரதம் !

—எஸ். வி. எஸ்.

படம்: வீரச் செயல்கள் புரிந்த குழந்தைகளுக்குப் பதக்கம் அணிந்துப் பாராட்டுகிறார் பாரதப் பிரதமர்.



# சிலையைத் தேடி...

கதை
வாண்டு மாமா
சித்திரம்
ரமணி..

— 20 —

















# குடை ராட்டினம்

எஸ். ரங்கநாயகி

## அத்தியாயம் 5

சட்டென்று படத்தைத் தன் ஜாக்கெட்டுக்குள் மறைத்துவிட்டாள் காந்தி.

"....உம்... வந்து...."

"சொல்லப் போகிறாயா, இல்லையா? யாரைப் பார்த்துச் சிரித்துச் சீண்டி விளையாடினாயாம்?"

"சொல்லட்டுமா?"

"சொல்லு!"

"இந்தப் பரந்த ஜெகமதினில் வாசு என்பானும் ஒருவன்."

ரமாவின் முக ஒளி குறைகிறது. 'இவள் என்ன சொல்கிறாள்?'

"அந்த வாசுதேவனுக்கு ஒரு காதல் தேவி உண்டாம்..."

ரமா உடனே மகிழ்வு கண்டாள். "ஏய், போக்கிரி! நான் ஒன்று கேட்டால் நீ ஒன்று சொல்லிக் கொண்டு... சும்மா ஏமாற்றாதே. நீ படம் வைத்திருந்தாய். நான் பார்த்தேன். அது யாருடையது? எந்தக் காதல் ஜெகத்தில் நுழைந்திருக்கிறாய், சொல்லு!"

"பைத்தியக்காரனுக்குத் தன்னைப் போலவே மற்றவர்களும் பைத்தியக்காரர்களாகத் தோன்றுவார்களாம். அது போல் நீ நுழைந்துவிட்ட பாதையிலேயே என்னையும் நோக்குகிறாய்.... அம்மா தேவி! போதும் நீ படும் பாடு. என்மீது கொஞ்சம் தயவு வை."

"காந்தி! அப்பாவாக நமக்கு வரன் தேடுவார் என நாம் எதிர்பார்க்க முடியாது. நல்ல காலமாக நீயாக யாரையோ தேர்ந்தெடுத்து விட்டாய். மூத்த சகோதரி என்ற முறையில் நானே அப்பாவிடம் உன் விவாகத்தைப் பற்றிக் கூறுகிறேன். அப்போதாவது உன் மனத்தைத் திறந்து காட்டுவாய் அல்லவா?" என்று கூறிய ரமா கீழே தோட்டத்தில் அமர்ந்திருந்த தந்தையிடம் ஓடினாள்.

அவள் சென்றதும் காந்தி பெருமூச்சு விட்டாள். அது ஏக்கத்தின் அறிகுறியா? நிம்மதியின் அடிச்சுவடா? அவளுக்கே புரியவில்லை.

தந்தையிடம் ஆவலோடு கூற வந்தவளுக்குத் தடையாக ரூபகுமார் உட்கார்ந்திருந்தான். ரமா தயங்கி நின்றாள்.

"மிஸ் ரமா! ஏன் தயங்கி நிற்கிறாய்? வந்து உட்கார். நான் என்ன வேற்று மனிதனா? என்னிடம் என்ன சங்கோசம்?" என்றான் ரூபகுமார்.

"வாம்மா, ரமா! நம்ம ரூபகுமார் தானே? வந்து உட்காரு!" என்றார் தந்தையும்.

ரமா ஒன்று புரிந்து கொண்டாள்: 'தான் இல்லாத வேளைகளில் ரூபகுமார் வந்திருக்கிறான்; தந்தையோடு நன்கு அறிமுகம் செய்து கொண்டிருக்கிறான். எல்லாம் அத்தையின் ஏற்பாடாகத்தான் இருக்கும்.' அதற்கேற்றாற்போல் ரூபகுமாரின் பேச்சும் தொடர்ந்தது:

"ரமா! வாசு இப்படி நடந்துகொள்வான் என்று நான் அன்று எதிர்பார்க்கவில்லை. ஏதோ பேச்சுக்குத்தான் 'முறைக்காரப் பையன்' என்று சொன்னேன். அப்புறம் நீ அவன் ஸ்கூட்டரில் நல்லபடி வீடு திரும்பியிருக்க வேண்டுமே என்று கவலையாகி விட்டது. வீடு சென்

றதும் மாமாவுக்கு உன்னைப் பற்றிக் கேட்டுப் 'போன்' செய்தேன். நீ உன் அறையில் சுகமாக இருக்கிறாய் என்று மாமா சொன்ன பிறகுதான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது!''

'என்றோ நடந்ததை இன்று ரூப குமார் ஏன் கிளற வேண்டும்?' மனத்தில் எழுந்த இந்தக் கேள்வியைத் தொடர்ந்து ரமாவைச் சிந்திக்க விடாமல், ''பழைய குப்பைகளையெல்லாம் கிளறும் வழக்கம் இந்த வீட்டில் யாருக்கும் கிடையாது'' என்று கூறிக் கொண்டே வந்தாள் காந்தி, மல்லிகைப் பந்தலுக்குப் பின்புறமிருந்து.

ரமா கீழே இறங்கிச் சென்றதுமே, காந்தியால் மாடியில் அமர்ந்திருக்க முடியவில்லை. சில நிமிடங்கள் அவள் ரமாவுக்காகக் காத்திருந்தாள். 'குதூகலத்துடன் ஓடின ரமா தந்தையிடம் என்ன கூறியிருப்பாள்? அப்பாவின் பதில் என்னவாக இருந்திருக்கும்? தந்தை கூப்பிட்டுக் கேட்டால் தான் என்ன பதில் சொல்வது? வாசுவை நானும் காதலிக்கிறேன். எனக்கே மணம் முடித்து விடுங்கள் என்று கூறி விட முடியுமா? சே! தன்னால் அப்படிச் சொல்லவே முடியாது. சகோதரியின் காதலுக்குக் குட்டையைக் குழப்ப முடியாது.'

பொறுமையின்றி அவள் கீழே வந்தாள். ரூபகுமாரின் பேச்சுக்கு ரமாவின் சார்பாக ஒரு சூடான பதிலும் கொடுத்து வைத்தாள்.

காந்தியை அவர்கள் யாரும் அப்பொழுது அங்கே எதிர்பார்க்கவில்லை. ரமா தனக்குப் பக்க பலம் கிடைத்து விட்ட மகிழ்ச்சியில் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள்.

''பழைய குப்பை என்ன, பழைய குப்பை! நீங்கள் இரண்டு பேரும் வீட்டுக்கு வந்து ஒன்றும் சொல்வது கிடையாது. மூன்றாம் மனிதனின் மூலம் வீட்டுக்கு விஷயம் தெரிந்தால் அதைக் குப்பைன்னுசொல்லிவிட முடியுமா?'' பொன்னம்மா கிளப்பினாள்.

''அத்தை! அப்பாவுக்குத் தெரியாத ரகசியம் என்று நாங்கள் என்றுமே எதையுமே வைத்துக் கொண்டதில்லை. நினைவிருக்கட்டும்!'' என்றாள் காந்தி.

''கேட்டியாடா, கோசல், கேட்டியா? நீ பெண்களை வளர்த்த லட்சணத்தை நான் எங்கே போய்ச் சொல்வேன்?''

பொன்னம்மா புலம்பத் தொடங்கி விட்டாள்.

கோசல்ராம் எல்லோருக்கும் நல்லவராக எழுந்து நழுவப் பார்த்தார்.

''மாமா! நான் ஒன்று முக்கியமாகச் சொல்ல வந்தேன். பேச்சு எங்கோ போய்விட்டது.''

'என்ன?' என்ற கேள்விக் குறியுடன் கோசல்ராம் ரூபகுமாரை நோக்கினார்.

''இன்று நாம் எல்லோரும் சினிமாவுக்குப் போய் வந்தால் என்ன?''

கோசல்ராம் பதில் கூறு முன்னரே பொன்னம்மா முந்திக் கொண்டாள்: ''சினிமாவுக்கா? கண்டிப்பாகப் போக வேண்டியதுதான். படம் பார்த்து எத்தனை நாளாச்சு? கோசலுக்கும் இப்ப ஏதாவது ஒரு மாறுதல் வேண்டியது தான். எப்போதும் வேலை வேலைன்னு உட்கார்ந்து கிடக்கிறான். என்ன படம் பார்க்கப் போகிறோம்?''



"'காத்திருந்த காதலன்' — புது ரிலீஸ். எள்ளைப் போட்டால் எள்ளு விழாது. அவ்வளவு கூட்டம். டிக்கெட் கிடைக்காமல் பாதிப் பேர் திரும்புகிறார்கள்!"

"அப்படின்னு நீ டிக்கட் வாங்கிட்டியா?" என்று அக்கறையுடன் வினவினாள் பொன்னம்மா.

"நான் எதற்கு டிக்கட் வாங்கணும்? அந்தத் தியேட்டரில் எனக்கு நிறையப் பங்கு உண்டு. எப்போது வேண்டுமானாலும் உள்ளே நுழையலாம். உயர்ந்த வகுப்பில் எனக்கென எத்தனை ஸீட் வேண்டுமானாலும் கிடைக்கும்." பெருமை தொனித்தது அவன் குரலில்.

"அப்படியா?" வாயை அகல விரித்துப் பொன்னம்மா கேட்டாள்.

"ரமா! டிரஸ் செய்துகொள்ள உள்ளே போகும்போது சமையற்காரியிடம் ரூபகுமாரும் இரவு இங்கு சாப்பிடப் போவதாகச் சொல்லிவிடு" என்றார் கோசல்ராம்.

ரமா காந்தியை நோக்க, காந்தி ரமாவை நோக்கினாள். இருவருக்கும் போக விருப்பமில்லை. ஆனால் தந்தையோ அவர்கள் இருவரும் வர வேண்டியதை ஜாடையாகக் காட்டிவிட்டார்.

"நாங்கள் எதற்கப்பா? காரில் நெருக்கி உட்காரணும்!" என்று ரமா ஆரம்பித்தாள்.



''நெருக்கி உட்காருவானேன்? குமார் கார், நம் கார் இரண்டும் இருக்கிறதே!'' என்றார் கோசல்ராம்.

''எதுக்கு மாமா உங்கள் கார்? நான் அம்பாஸிடர் கொண்டு வந்திருக்கிறேன். இன்னும் இரண்டுபேர் வேண்டுமானாலும் வரலாம். ஸ்கூட்டரை நினைக்கும் மனத்தால் காரை நினைக்கக் கூடாது'' என்றான் ரூபகுமார். உதட்டோரத்தில் ஏளனச் சிரிப்பு எழுந்தது.

''ஆனால் என்னைக் கேட்டால் காதலர்கள் ஸ்கூட்டரைத்தான் விரும்ப முடியும். ஒரு காதலனுக்கு ஒரு காதலியும் ஒரு காதலிக்கு ஒரு காதலனும் தான் நேசப் பாங்குடன் பழகுவார்கள். அதனால் பெரிய வண்டிக்கான அவசியமில்லை.'' — காந்தி கூறினாள்.

ரூப குமாரின் முகம் சுருங்கியது. ரமாவோ மகிழ்ச்சியுடன் காந்தியை நோக்கினாள். 'எங்கள் ரமாவுக்கு ஒரு காதலன் உண்டு. வில்லனாக நீங்கள் இடையே குறுக்கிட வேண்டாம்' எனக் காட்டி விட்டாளோ?

**பா**தி வழி போய்க் கொண்டிருந்த போது ரூபகுமார் ராயப்பேட்டை நெடுஞ்சாலையில் வண்டியைச் சட்டெனப் 'பிரேக்' போட்டு நிறுத்தினான்.

அனைவரும் காரணம் அறிய அவனை நோக்கியபோது அவன் சாலையில் தன் பார்வையைச் செலுத்தி, ''வாசு, மிஸ்டர் வாசு!'' என்று கூவினான். எதிரே வாசுவின் ஸ்கூட்டர் மெள்ள வந்தது.

வாசு அருகில் வந்தான்.

ரமா மூர்ச்சித்து விழுந்து தனக்கு உயிர் போய்விடக் கூடாதா எனத் தவித்தாள். காந்தி பல்லை நறநற வெனக் கடித்தாள்.

''மிஸ்டர் வாசு! ஒரு சின்ன உதவி! நாளைக் காலையில் உங்கள் ஆபீசுக்கு நான் வருவதாக இருக்கிறேன். மானேஜர் சாரதியிடம் கூறி விடுங்கள்!''

''சரி!'' இது வாசுவின் பதில்.

குமாருக்கு நேர் பின்புறம் அமர்ந்திருந்த ரமா தலையை உட்புறமே வைத்துக் கொண்டிருந்தாள்.

வாசுவோ கோசல்ராம், காந்தி இருவரையும் பார்த்து விட்டான். அத்தை யாரெனப் புரியவில்லை. பக்கத்தில்...?

''என்ன பெரியம்மா, நாளை வடபழநி போவதை மாலையில் வைத்துக் கொள்ளலாமா? ரமாவையும் காந்தியையும் கேளு'' என்றபடி வேண்டுமென்றே பின்புறம் திரும்பினான் ரூபகுமார்.

அத்தை பதில் கூறுமுன்பே காந்தி முந்திக் கொண்டாள். ''மிஸ்டர் ரூபகுமார்! நாங்கள் வடபழநியோ தென்பழநியோ போவதாகத் திட்டமிடவில்லை. நீங்கள் உங்கள் சௌகரியப்படிப் போகலாம்'' என்றவள் வாசுவை நோக்கி, ''மிஸ்டர் வாசு! இந்தப் பெரிய கார் ஜம்பத்தில் எங்களுக்குச் சினிமாவுக்கு ஒரு லிப்ட் கிடைத்திருக்கிறது. நீங்களும் ஸ்கூட்டரைத் தூக்கிப் போட்டுக் கொண்டு வாருங்களேன். காரிலும் ரமாவின் பக்கத்தில் இடம் இருக்கிறது. சினிமாவும் ஓசியில் கிடைக்கும்'' என்றாள்.

வெட்டுத் திருப்பாகத் தலையைத் திருப்பி ரூபகுமார் அவனை நோக்கினான். அவனோ விஷமச் சிரிப்புடன் வெளியே பார்த்தான்.

அதற்குள் அத்தை, ''நல்லா இருக்கடி! நீ கண்டவனைச் சினிமாவுக்குக் கூப்பிடற லட்சணம்!'' என்றாள்.

அதற்குப்பின் வாசுவின் ஸ்கூட்டரோ ரூபகுமாரின் காரோ அங்கு நிற்கவில்லை.

* * *

**வெ**ளுத்த நீல உடல்; சிவப்புக் கரையில் இழைந்த ஜரிகைக் கோடு. ரமா உடுத்தியிருந்த புடவை அவள் அழகைப் பன்மடங்கு எடுத்துக் காட்டியது. அதற்குத் தகுந்ததாகச் சிவப்பில் ஜரிகை புட்டா சோளி. கழுத்தில் நீலக் கல் நெக்லஸ். காதில் நீல இலைமல் தோடு. நெற்றியில் நீலக் குங்குமத்தில் கோடிட்ட மெல்லிய திலகம்.

''ரமா! இந்த டிரஸ்ஸுக்கு மாட்ச் ஆகும்படியாக என் பர்ஸை எடுத்துப் போ!'' காந்தி தன் பெட்டியைத் திறந்து பர்ஸை எடுத்துக் கொடுத்தாள்.

ரமா தேவ மங்கையாகக் கிளம்பி விட்டாள்.

''உன் பிக்னிக் இனிதாக முடிய என் வாழ்த்துக்கள்!'' காந்தி கையை ஆட்டி விடை கொடுத்தாள்.

''ஆனந்தமென் சொல்வேனே...''

வாசுவைப் போல வாசுவின் ஸ்கூட்டரும் மகிழ்ச்சியில் மிதந்தது.

''என்ன இது. தெரு என்றுகூட நினைவில்லாமல் பாட்டெல்லாம் அமர்க்களமாக இருக்கிறது? எல்லோரும் உங்களையே பார்க்கிறார்கள்!'' என்றாள் பின்னால் அமர்ந்திருந்த ரமா.

''தெருவிலே போகிறவர்கள் என்னைத் தானே பார்க்கிறார்கள்? உன்னைப் பார்க்க வில்லையே! நீ ஏன் கவலைப் படுகிறாய்?'' என்று கிண்டலாகக் கேட்டான் வாசு.

''நல்ல வேளையாக அவர்கள் என்னைப் பார்க்க வில்லை. பார்த்தால் உங்கள் கோபக் கனலிலிருந்து தப்பிவிட முடியுமா?''

''பண்டைய காலப் பத்தாம் பசலியாக என்னையும் நினைத்து விட்டாயா?''

"பத்தாம் பசலியோ, பதினேராம் பசலியோ! ஒருவர் குணம் எந்தக் காலத்திலும் மாறுவதில்லை. அன்று என்னை ரூபகுமாரின் காரில் பார்த்தவர், கோபத்தில் கண் மண் தெரியாமல் ஓட்டினீர்களே, அது இன்னும் என் கண் முன்னல் நிற்கிறது."

"பின் என்ன? முறைக்காரன் என்று ஒருவன் தம்பட்டம் அடித்தால் நான் சும்மா இருந்துவிட முடியுமா?"

"முடியாதுதான்; அதற்காகக் காதலித்தவளோடு ஊட வேண்டியதுதான். ஊடலைத் தவிர்க்க இப்படி மகாபலிபுரம் போக வேண்டியதுதான்!"

"சாமர்த்தியமாகப் பேசி விட்டதாக நினைப்போ?"

"போதும், இந்தப் பேச்சு! மீண்டும் ஊடலுக்கு வித்திட விரும்பவில்லை. உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமோ?"

"என்ன?"

"காந்தியும் தன் மனத்தில் யாரையோ வைத்துப் பூஜிக்கிருள்."

"உனக்கு எப்படித் தெரியும்?"

"அன்றைக்கு ஒரு நாள் புகைப்படம் ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு தன்னை மறந்து ஈடுபட்டிருந்தாள். என்னைக் கண்டதும் காட்டாமல் மறைத்து விட்டாள். துருவித் துருவிக் கேட்டும் பதில் சொல்லவில்லை."

"அவள் பதில் சொல்ல வேண்டுமானல் அதற்கு ஒரு வழிதான் இருக்கிறது. முதலில் நம் திருமணம் முடிய வேண்டும். அப்புறம் அவள் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தால் தானகக் கூறி விட்டுப் போகிருள்."

"மெய்தான். இந்த அத்தை ஊருக்குப் போகட்டுமே என்று பார்த்தேன். அவளோ கிளம்பும் வழியைக் காணும்."

"அவள் தன் தங்கையின் மகன் கல்யாணத்தை முடித்தபின்னே புறப்படுவது என்று இருந்தால்...." வாசு விளையாட்டாகத்தான் சொன்ன்ன்.

ரமாவின் மனத்தில் சுருக்கென்று இவ்வார்த்தைகள் தைத்தன. "எப்பொழுது பார்த்தாலும் ரூபகுமார் நினைவுதான உங்களுக்கு?" என்று உறுமினள்.

அவள் உறுமலை எதிரொலிப்பதே போல் ஸ்கூட்டர் படபடத்தது. பத்தடி தூரம் சென்றதும் நின்று விட்டது.

வாசு இறங்கி ஸ்கூட்டரைப் பிரதட்சிணம் செய்தான். எத்தனை தாஜா செய்தும் அது மசிந்து கொடுக்கவில்லை.

"இப்பொழுது என்ன செய்வது?" என்று ரமா கேட்டாள்.

"அதுதான் எனக்கும் புரியவில்லை!" வாசு தவித்தான். இருவரும் ஸ்கூட்டரைப் பார்த்தபடியே நின்றனர்.

"அடேடே, இதென்ன இப்படி?"

பின்னல் வந்து நின்ற காரிலிருந்து இப்படி ஒரு கேள்வி பிறந்தது.

இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர். ரூபகுமார் காரிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான். இருவரும் ஒருவரையொருவர் நோக்கினர். பூஜைவேளையில் கரடிபோல் இவன் எங்கு வந்து

---

★

குடியரசு தின விழாவில் பங்கெடுத்துக் கொள்ள புதுதில்லிக்கு வந்த கிராமிய நடன கோஷ்டிகளுக்குப் பாரதப் பிரதமர் ஒரு வரவேற்பு அளித்தார். இங்கு பஞ்சாபிய நடன கோஷ்டியினருக்கிடையில் இந்திரா சிரித்து மகிழ்கிருர்.



# எழுத்துக்கு மதிப்பு எடை!

என் நூல் ஒன்றுக்கும் பாரத அரசாங்கம் பரிசளித்தது. பெருமையாக இருந்தது. நமக்கும் ஒரு கௌரவம் கிட்டுகிறதே என்று! நான் என் எடையில் ஓரளவு கூடிவிட்டதாகக் கூட நினைத்தேன்.

சில நாட்களுக்கெல்லாம், வழக்கம் போல் ஆயிரத்தைந்நூறு பிரதிகள் எடுத்துக் கொள்ளப்படும் என்றும் என்ன விலைக்குத் தர முடியும் என்றும் கேட்டு அரசாங்கத்திடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

விற்பனையாளர்களுக்குரிய அதிகபட்சக் கழிவுத் தொகை தரச் சம்மதம் என்றும், புத்தகத்தின் விலை ரூ. 1-50 என்றும் பதில் எழுதினேன்.

'புத்தகத்துக்கு உபயோகப்படுத்தப்பட்டிருக்கும் காகிதம், பைண்டிங், அச்சுக் கூலி ஆகியவற்றைக் கணக்கிட்டால் 75 காசே அடக்க விலையாகத் தோன்றுகிறது. அதனால், அந்த விலைக்குத் தர இயலுமா?' என்று கேட்டுக் கடிதம் வந்தது.

'மெய்தான்; அடக்க விலை அதுதான். மெய் வருந்த எழுதியதற்கு ஒரு மதிப்புக் கிடையாதா? அதற்கு ஒரு கூலி வேண்டாமா? எனவே, குறைந்தபட்சம் பிரதி ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் எடுத்துக் கொள்வதாயிருந்தால், பிரதிகளை அனுப்பி வைக்கிறேன்!' என்று சம்மதம் தெரிவித்துக் கடிதம் எழுதினேன்.

கடிதப் போக்குவரத்து வளர்ந்ததே ஒழியப் புத்தகத்தின் விலை கூடவில்லை.

வந்த ஆத்திரத்தில், நூலின் மதிப்பைத் தெரியாதவர்களிடம் விற்பதைக் காட்டிலும், எடைக்கு எடுப்பவர்களிடம் போட்டால் என்ன என்று தோன்றியது. எடை போட்டுப் பார்த்தால், அரசாங்கம் கேட்ட விலையைக் காட்டிலும் எடை விலை கூடியிருந்தது.

எழுத்துக்கு மதிப்புத் தராதவர்களிடம் விற்பதைக் காட்டிலும் எடையிலும் எடை போட்டு மதிப்புக் கூட்டும் பழைய புத்தகக்காரர்களுக்கே போட்டு விட்டால்.....? -- இப்படித்தான் என் சிந்தனை ஓடியது.

[நாகார்ஜுனசாகரில் நடைபெற்ற 'பாரதி சாகித்யகார் பிரதிஷ்டான்' கருத்தரங்கில், பாரத அரசாங்கச் சுற்றுலா அமைச்சர், ஸ்ரீமதி சரோஜினி மகிஷி கூறியது.] - ரா. வி.



சேர்த்தான் இப்படி? — இருவருமே திகைத்தனர்.

ரூபகுமாருக்கோ ஒரே ஆனந்தம். மகாபலிபுரம் வரை தூக்கிக் கொண்டு போக வேண்டிய அவசியம் அவனுக்கு நல்ல வேளையாக ஏற்படவில்லை.

ரூபகுமார் மந்தகாசத்துடன் இருவரையும் நோக்கினான். "வாசு! இப்படி எதிர்பாராமல் நடந்துவிட்டது போலிருக்கு!" என்றான்.

"எதுதான் எதிர்பார்த்து நடக்கிறது?" எரிச்சலுடன் கூவினான் வாசு. "டைரக்டர் ஸார்! நீங்கள் வருவீர்கள் என்று நாங்களும் எதிர்பார்க்கவில்லை."

ஏதோ ஹாஸ்யத்தைக் கண்டவன் போல் ரூபகுமார் பெரிதாகச் சிரித்தான்.

வாசுவுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. ரமாவை நோக்கி, "கிளம்பு, நடு வழியில் நிற்பதில் என்ன லாபம்?" என்று கேட்டான்.

"எங்கே கிளம்புகிறீர்கள்?"

"கிட்டத்தில் உள்ள கிராமம் ஒன்றுக்கு இதைத் தள்ளிச் சென்று யாரா வது ஒருவரிடம் பொறுப்பாக ஒப்படைத்து விட்டுப் பஸ்ஸில் ஊர் திரும்பப் போகிறோம். அங்கிருந்து மெக்கானிக் ஒருவனை அனுப்பிச் சரி செய்து எடுத்து வரச் சொல்லப் போகிறோம்!"

வாசு வில்லனுக்கு வில்லனாகப் பதில் சொன்னான்.

"என்ன ரமா, அடுத்த கிராமம் வரை தள்ளிக் கொண்டு போக முடியுமா?" என்று கேட்டான் ரூபகுமார்.

"பத்துப் பேர் தள்ள வேண்டிய கார் அல்ல இது. ஸ்கூட்டர்தானே? வாசு ஒருவரே கூடப் போதும்." ரமாகூடத் துணிச்சலுடன் கூறிவிட்டாள்.

"அடாடா, எனக்குத் தெரியாமல் போய் விட்டதே!" ஏளனமாக ரூபகுமார் மொழிந்தான். பிறகு சட்டென்று, "இந்த ஸ்கூட்டரைப் பின் பற்றி நீ எதற்காக ஓட வேண்டும், ரமா? நீ என்னோடு கிளம்பு, காரில் நான் உன்னைச் சென்னைக்குக் கொண்டு விட்டு விடுகிறேன்" என்றான்.

"வேண்டாம், ரூபகுமார்! உங்களுக்கு எதற்கு வீண் சிரமம்? நீங்கள் ஏதோ வேலையாக எங்கேயோ கிளம்பியிருக்கிறீர்கள். போய் வாருங்கள்!" என்றாள் ரமா.

"இல்லை, ரமா! நானும் மகாபலிபுரத்துக்கேதான் கிளம்பினேன். நீங்களும் அங்குதான் போயிருப்பதாகத் தெரிந்தது. வாசுவின் அம்மா மட்டும் கூறவிட்டால் எனக்குத் தெரிந்திருக்க ஏது நியாயம்?" என்றான் ரூபகுமார்.

(தொடரும்)

# பகைவனுக்கு அருளிய நன்னெஞ்சம்



ஏப்ரல் 13, 1919: அமிர்தசரஸில், ஜாலியன்வாலா பாக் என்கிற சதுக்கம். ரௌலட் அடக்குமுறைச் சட்டத்தைக் கண்டனம் செய்ய அங்கு ஒரு பெரும் பொதுக்கூட்டம். சுமார் 20,000 பேர் அமைதியாகக் குழுமியிருந்தார்கள். 55 வயதான ஜெனரல் டயர் - உன்னூர் ராணுவ அதிகாரி — நூறு சிப்பாய்களை அணி வகுத்து இரு கவச மோட்டார் வண்டிகளுடன் அங்கு விரைந்தான். கூட்டம் கூடியிருந்த மைதானத்தின் குறுகிய வாயில்களை வளைத்துக் கொண்டான். ''சுட்டுத் தள்ளு'' என்று உத்தரவிட்டான், எச்சரிக்கை ஏதும் விடாமல். ''டும் டுமீல் டும் டுமீல், டுமீல்...'' கூட்டம் சிதறி ஓடியது. குறுகிய சந்துகள் வழியாகத் தப்பி ஓடியவர்மீதெல்லாம் துப்பாக்கிச் சூடு. தோட்டா மாரி ஓயவில்லை. ஆயிரத்துக்கும் அதிகமான பேர் பிணமாகச் சுருண்டு விழுந்தார்கள். நூற்றுக் கணக்கானவர் படுகாயமுற்றனர். பாரதம் வெகுண்டது. வையகம் திடுக்கிட்டது. பிரிட்டிஷ் அரசாங்கமோ போலி விசாரணை நடத்தியது.

''பஞ்சாப் முழுதும் திகில் எழுப்பி, இந்தியருக்குப் பாடம் கற்பிக்க வேண்டும் என்பதற்காகவே தோட்டாக்கள் தீரும் வரை சுட்டுத் தள்ளச் சொன்னேன்'' என்றான் ஜெனரல் டயர் இறுமாப்புடன், விசாரணைக் கமிஷன் முன் நின்று.

''கவச மோட்டார் வண்டிகளைக் குறுகிய சந்தின் வழியாக மைதானத்துக்குள் கொண்டு போக முடியாமற் போய்விட்டது. முடிந்திருந்தால் சுழல்துப்பாக்கிகளை இயக்கிஇன்னும்எவ்வளவோ பேர்களைச் சாக அடித்திருப்பேன்'' என்றும் கொக்கரித்தான்.

ராணுவ சர்வீஸிலிருந்து அவனை ராஜிநாமாச் செய்ய வைத்ததுடன் நின்றுவிட்டது பிரிட்டிஷ் தலைமைப் பீடத்தின் நியாயம்.

ஜூலை 1927 : இங்கிலாந்தில் தனது இல்லத்தில் ஜெனரல் டயர் கொடிய பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டு மாதக் கணக்காகத் துடித்துக்கொண்டிருந்தான். (அதே வருடம் அவ்வியாதி முற்றி இறந்து போனான்).

டயர் நோயினால் அவதியுறும் செய்தியைப் படித்துவிட்டு ஓர் இந்தியர் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில், 'ஜாலியன்வாலா

'துப்பாக்கிகளில் 'ரவை'கள் தீர்ந்து போய்விட்டன. இல்லை என்றால் மக்களை இன்னும் சுட்டுத் தள்ளியிருப்பேன்!'
— ஜெனரல் டயர்.



ஜாலியன்வாலாபாக் நினைவுச் சின்னத்தின் எதிரே ஸ்ரீமதி இந்திரா காந்தி பேசுகிறார்.



பாக்கில் புரிந்த அக்கிரமத்துக்குத் தகுந்த தண்டனையை இப்போது அனுபவிக்கிறான்' என்று குறிப்பிட்டிருந்தார்.

அதற்குக் காந்திஜி உடனே பின்வருமாறு பதில் எழுதினார்:

''ஜெனரல் டயர் பக்கவாத நோயால் கஷ்டப்படுகிறார் என்பதைக் குறித்து நான் உண்மையிலேயே வருந்துகிறேன். ஜாலியன் வாலாபாக்கில் அவரது நடவடிக்கைக்கும் இந்த நோய்க்கும் யாதொரு சம்பந்தமும் இருப்பதாக என்னால் எண்ண முடியவில்லை. அவ்வித நம்பிக்கைகளின் விளைவுகளைப் பற்றி நீங்கள் ஆலோசித்ததுண்டா? எதுவாயினும், நல்லவர்கள் — தூய்மையானவர்கள் என்று நாம் கருதும் பலரும் பல கொடிய வியாதிகளால் பீடிக்கப்படுவதைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். என்னையே உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்களேன்! வயிற்றுக் கடுப்பும் குடல் அழற்சியும் என்னை அண்டின. இந்தத் தடவை எனக்கு ஏற்பட்டுள்ள இலேசான வாத நோய்த் தொல்லையைப் பற்றியும் உங்களுக்குத் தெரிந்திருக்கும். ஆங்கிலேய அரசாங்கத்தை மூர்த்தண்யமாக எதிர்ப்பதன் காரணமாகத்தான் இந்த வியாதிகளையெல்லாம் காந்தி அனுபவிக்கிறார் என்று சில ஆங்கிலேய குணவான்கள் உண்மையிலேயே எண்ணினால் எனக்கு எத்தனை வருத்தமாக இருக்கும்!...''

ஆதாரம்: 24-7-1927 தேதியிட்ட காந்திஜியின் கடிதம்

அனுப்பியவர்: வ. க. ரங்கராஜன்

# மலையளவு உயர்வான் நகத்தளவு சிறுப்பான்

குமரி மாவட்டத்திலேதான் அனுமனது மிகப் பெரிய உருவமும், மிகச் சிறிய உருவமும் உள்ளது. சுசீந்திரத்தில் உள்ள தாணுமாலயன் கோயிலுக்கே இப்பெருமை கிடைக்கிறது. அலங்கார மண்டபத்தில் கிழக்கோரம் சித்திர சபையைத் தொட்டு ஸ்ரீ ராமபிரான் சந்நிதியை நோக்கி அஞ்சலி ஹஸ்தத்தில் நின்றருளும் பதினெட்டு அடி உயரமுள்ள அனுமன் திருவுருவம் மகேந்திரகிரி உச்சியில் அவர் எடுத்த பிரம்மாண்டமான உருவத்தையும், அசோக வனத்தில் சீதாப் பிராட்டியிடம் காண்பித்த விசுவரூபத்தையும் நமக்கு ஞாபகமூட்டுகின்றன. ஒரே கல்லில் செதுக்கப்பட்ட இந்த உருவச் சிலை இம்மாவட்டத்துச் சிற்பிகளின் கலைத் திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. அனுமன் திருஉருவங்களில் இதுதான் இந்திய நாட்டிலேயே சிறந்ததாகக் கொள்ளலாம்.



அனுமன் நகத்தளவு உருவம் முதல் மலை அளவு உருவம் வரை எடுக்கும் திறன் கொண்டவன். சீதாப் பிராட்டியைத் தேடி அலைந்த அனுமனை அசோக வனத்தில் காவல் செய்து கொண்டிருந்த சுரசா எடுத்து விழுங்க, அனுமன் தன் உருவைச் சிறிதாக்கி அந்த அரக்கியின் காது வழியாக வெளியேறினான் என்று இராமாயணக் கதை கூறுகிறது. இந்நிகழ்ச்சி அனுமன் சிலையினருகே உள்ள தூணில் அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இதுவே அனுமன் சிலைகளில் மிகச் சிறியது.

— எஸ். பத்மநாபன்

## துறவி நண்டு

மனிதர்களில்தான் துறவிகள் இருக்கிறார்கள். நண்டுகளிலும்கூடத் துறவிகள் உண்டா என்று ஆச்சரியப்படுகிறீர்களா? வியப்படைய வேண்டாம். உண்மையிலேயே நண்டு இனத்தில் 'துறவி நண்டு' எனப்படும் ஒரு வகை நண்டுகள் உள்ளன. இவை கடற்கரை ஓரங்களில் காணப்படுகின்றன. கடலின் ஆழமில்லாத பகுதிகளில் வசிக்கும் தன்மை உடையன. இவை காலியான சங்குகளைத் தம் ''வீடு''களாக உபயோகித்துக் கொள்கின்றன. இந்த நண்டு தன் உடல் வளர்ச்சிக்கு ஏற்றாற்போல் அடிக்கடி சங்கையும் மாற்றிக் கொள்ளும். சில சமயங்களில் தன் வளர்ச்சிக்கேற்ற அளவில் இருக்கும் சங்கினுள் வேறு (நத்தை போன்ற) பிராணியைப் பார்த்துவிடின், அதை வெளியே இழுத்துக் கொன்று தின்றுவிட்டு, உள்ளே புகுந்துவிடும். கூரிய பற்களை உடைய வேறு கடற்பிராணிகளின் மூலம் ஏற்படும் துன்பத்துக்கு அஞ்சியே சங்கினுள் வசிக்கின்றன.

கடலில் வாழும் ''கடற் பஞ்சு அனிமோன்'' என்றதுபூப்போன்ற பிராணிகளும், ''ஹைட்ராய்ட்ஸ்'' என்று கூறப்படும் பிராணிகளும், இவற்றின் உடம்புக்கு மேல் போர்வை போன்று ஏராளமாயிருக்கும். இவை நண்டுக்குப் பாதுகாப்பாய் இருப்பதினால், நண்டு இவற்றைத் தடை செய்யாமல் இருப்பதுடன், தன் வாயில் உள்ள இரையின் பகுதிகளை எடுத்துக் கொள்ளவும் அனுமதிக்கும். இவை இப்படி ஒன்றுக்கொன்று உதவியாய் இருப்பது உண்மையில் விந்தைக்குரிய விஷயம்தான் இல்லையா? இதை ஆங்கிலத்தில் 'மியூசுவலிஸம்' (Mutualism) என்று கூறுகிறார்கள்.

—எஸ். சாரதாம்பாள்



படம்: துறவிநண்டு சங்கினுள் இருக்கும் நிலையில் வரையப்பட்டது. சங்கின் மேல் புறத்தை Hydroids எனப்படும் ஒரு வகைப் பிராணிகள் தம் இருப்பிடமாகத் தேர்ந்தெடுத்து, உட்கார்ந்துள்ளன.

## அத்தியாயம் 23

# அந்த நாள்!

கோமளா சந்தித்த நாலாவது நபர் இரக்கத்துடன் ''என்ன விஷயம் குழந்தே?'' என்று கேட்கிறார்.

''அம்மாவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லே; அப்பாவுக்கு ஃபோன் போடணும்; உதவி பண்ணுங்கோ மாமா!'' என்று சொல்லி அழுகிறாள் கோமளா.

கருணை உள்ளம் படைத்த அந்த மனிதர், சிறுமியைத் தூக்கிக் கொண்டு, ஓட்டமும் நடையுமாக விரைகிறார். இரண்டு பர்லாங் தூரத்தில் 'பப்ளிக் டெலிபோன்' பூத் ஒன்று இருக்கிறது.

''சில்லறை வச்சிருக்கியா பாப்பா?''

தன் அசட்டுத்தனத்தை அப்போது தான் உணருகிறாள் கோமளா. 'பங்கஜம் மாமி வீட்டிலிருந்து ஃபோன் போடுவதானால் கூடக் காசு வேண்டுமே. தப்பாமல் இரண்டணா வாங்கிவிடுவாளே அவள். அஞ்சறைப்பெட்டியைத் துழாவிப் பார்த்துச் சில்லறை கொண்டு வந்திருக்க வேண்டாமோ? அவசரத்தில் முக்கியமான விஷயத்தை மறந்து போனேனே?' இப்போது அவள் கையில் அரையணா பிச்சைக் காசுதான் இருக்கிறது. 'காசு இல்லே' என்று சொல்லக் கூச்சப்படும் தன் முட்டாள்தனத்தை எண்ணியதும் கோமளாவுக்கு மறுபடியும் அழுகை பீறிட்டுக் கிளம்புகிறது.

''அடாடா! அழாதே பாப்பா! காசு நான் தரேன்'' என்கிறார் அந்த நல்ல மனிதர். ''அப்பாவுடைய ஆபீஸ் டெலிபோன் நம்பர் என்ன சொல்லு!''

கோமளா கூறுகிறாள்.

''தேவலையே. இதையெல்லாம் தெரிஞ்சு வச்சிருக்கியே! சமர்த்துத்தான்!'' ஃபோன் போட்டுக் கொடுக்கிறார் அவர். ரிஸீவரைக் கையில் வாங்கிக் கொண்டு 'ஹலோ' என்கிறாள் கோமளா. மணி அடிக்கிறது. யாரோ ஃபோனை எடுக்கிறார்கள். ''ஹலோ, ஹலோ'' என்கிறாள் கோமளா. அவர்கள் பேசுவது இவளுக்குக் கேட்கிறது. இவள் பேசுவது அவர்களுக்குக் கேட்கவில்லே. நிமிஷங்கள் ஓடிச் செல்கின்றன. கோமளாவின் புதிய நண்பர் ரிஸீவரை வாங்கிக் காதில் வைத்துக் கொண்டு ''ஹலோ ஹலோ'' என்கிறார். பயனில்லே. ''பாப்பா சரியான நம்பர்தான் சொன்னியா?''

''ஆமாம் மாமா, நானே எத்தனையோ தடவை அப்பாவை இதே நம்பரில் கூப்பிட்டுப் பேசியிருக்கேனே.''

''என்ன கோளாறோ தெரியலையே! அவர் ஆபீஸ் டெலிபோன் ரிப்பேராகி இருக்கோ என்னவோ?''

''மறுபடியும் போட்டுப் பாருங்கோ, மாமா!''

மறுபடியும் ஃபோன் போட்டுப் பார்க்கும் முன்னர் சட்டைப் பையைத் துழாவிப் பார்க்கிறார் அந்த மனிதர். இன்னும் இரண்டணா காசுதான் அவரிடம் பாக்கி யிருக்கிறது. அதையும் வீணாக அடிக்க அவருக்கு மனம் வரவில்லே.

''பாப்பா! அம்மாவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லேன்னு ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போக ஆம்புலன்ஸ் வண்



## சாருலதா

கி.ராஜேந்திரன்

டிக்கு ஃபோன் போடுகிறேன். அதுக்குக் காசு கிடையாது.''

''சரி மாமா.''

''விலாசம் என்ன?''

கோமளா சொல்லுகிறாள்.

''கெட்டிக்காரி!'' என்று பாராட்டுகிறார் அவர். ஆம்புலன்ஸுக்கு ஃபோனில் சொல்லியானதும், ''நீ வீட்டுக்குப் போ பாப்பா. அம்மாவை ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போக மோட்டார் வண்டி வரும்'' என்கிறார். ''வழி தெரியுமில்லையா உனக்கு?''

கோமளா தலையாட்டுகிறாள். ''மாமா! உங்களுக்குக் கோடிப் புண்ணியம்!'' என்று இதயபூர்வமாக

வாழ்த்தி விட்டுச் சிட்டாகப் பறந்த அந்தக் குழந்தையைப் பார்த்தபடி சற்று நேரம் கண் கலங்கி நிற்கிறார் அந்த மனிதர். பிறகு தம் வழியே செல்கிறார்.

கோமளா வீடு திரும்பியபோது வாசலிலும் முற்றத்திலும் பெண்கள் பலர் நின்று சளசளவென்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவற்றை மீறி அபயத்தின் முனகல் சத்தம் கேட்கிறது. தெருவில் இருந்த எல்லா வீடுகளுக்கும் விஷயம் பரவிவிட அத்தனை பேரும் இங்கு வந்து கூடியிருக்கிறார்கள். ஆனால் ஒருவராவது உருப்படியாக ஒரு காரியம் செய்யக் காணோம். யாரோ ஒரு பெண்மணி மட்டும் தன்னாலான கைங்கரியம் என்று குமரேசனுக்கு வாழைப்பழத்தை உரித்துக் கொடுத்துச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறாள்.

கோமளாவைப் பார்த்ததும் அபயத்தின் முகத்தில் வேதனையையும் மீறி ஒரு தெளிவு பிறக்கிறது. ''அப்பா வராரா?'' என்று கேட்கிறாள்.

குழந்தை கோமளி பொய் பேசும் கலையை இன்னும் கற்கவில்லை. ''ஆபீஸ் ஃபோன் ரிப்பேராகி இருக்கு அம்மா. இப்போ ஆஸ்பத்திரியிலிருந்து வண்டி வந்துடும்.''

''மூதேவி! ஒரு ஃபோன் கூடப் பண்ணத் தெரியாமல் வந்து பொறந்தியே எனக்கு!''

மாற்றாந் தாயிடமிருந்து விடுதலை கிடைத்ததாக மகிழ்ந்து கல்யாணத்துக்குப் பிறகு கணவன் இல்லத்துக்கு வந்து சேர்ந்தவள் அபயம். தாய், தந்தை, கணவன், தெய்வம் எல்லாம் அவளுக்குப் பத்மநாபன்தான். வாழ்வா சாவா என்று போராடுகிற நிலையில் கணவனைப் பார்க்க முடியவில்லை என்ற எண்ணத்தையே சகிக்க மாட்டாமல் பொன்னை வைகிறாள் அவள்.

ஆம்புலன்ஸ் வண்டி வருகிறது. அபயத்தை ஸ்ட்ரெச்சரில் தூக்கிக்கொண்டு போய் வண்டியில் ஏற்றுகிறார்கள். ''எப்படியாவது அப்பாவை ஆஸ்பத்திரிக்கு வரச் சொல்லும்மா'' என்று கோமளாவைப் பரிதாபமாகப் பார்த்துக் கேட்டுக் கொள்கிறாள் அபயம்.

அதுதான் அவள் மகளுடன் கடைசியாகப் பேசிய வார்த்தைகள். பத்மநாபனுக்கு விஷயம் தெரிந்து அவர் மருத்துவ மனைக்குப் போய்ச் சேருவதற்குள் காரியம் முடிந்து விடுகிறது. தாய் — குழந்தை இரண்டுமே பிழைக்கவில்லை.

அபயத்தைப் பற்றிய பேச்சு அந்தத் தெருவில் நீண்ட நாட்களுக்கு அடிபடுகிறது. துக்கம் விசாரிக்க வந்த பெண்கள் ஒருவர்மாற்றி ஒருவர் கோமளாவை அவள் விருப்பத்துக்கு விரோதமாய்க் கட்டிக் கொண்டு சமாதானப் படுத்துகிறார்கள். மூக்கைச் சிந்தி முற்றத்தில் வீசுகிறார்கள். தேவையில்லாத புலம்பல். வேண்டாத அழுகை. போதாக்குறைக்குக் கோமளாவின் எதிரேயே கதையும் கற்பனையுமாக வளர்த்து வளர்த்துப் பேசித் திருப்தி அடைகிறார்கள்.

''கொடி சுற்றிப் பிறந்ததாம். அதுதான் இரண்டு பேருமே தக்கலை!''

''தலை இறங்கலையாம்! ஒற்றைக் கால் முதல்லே நீண்டு போச்சாம்! உயிரைக் குடிக்க வேறென்ன வேணும்?''

''ராட்சதக் குழந்தைம்மா அது! வயத்தைக் கிழிச்சுத் தானே எடுத்துப்போட்டா? நல்ல வேளையாகப் பிழைக்காமலிருந்ததே. அதைச் சொல்லு! அதை வேறே வைச்சுண்டு இவா அவஸ்தைப் படறதுக்கு இல்லாமே...''

இப்படித் தலைக்குத் தலை சுவாரசியம் கண்டு ரசித்துப் பேசுகிறார்கள். ''நீ ஒண்ணுக்கும் பயப்படாதே கோமளி: நாங்களெல்லாம் எதுக்கு இருக்கோம்? கவனிச்சுக்க மாட்டோமா?''



என்று சொல்லி அவள் பீதியை அதிகப் படுத்துகிறார்கள்.

இந்தச் சித்திரவதைக்கும் நாளா வட்டத்தில் முடிவு ஏற்படுகிறது. உணர் வாய் ஓய்கிறது.

இரண்டு குழந்தைகளைத் தன் பொறுப் பில் விட்டு விட்டுப் போய் விட்டாளே என்று நினைத்துக் கண்ணீர் விடு கிறார் பத்மநாபன். ஆனால் அபயம், கோமளாவின் பொறுப்பில்தான் பத்ம நாபன், குமரேசன் என்ற இரண்டு

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரம் வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிக்கோலஸ் (N) தயாரிப்பு

ANJ.TAM

குழந்தைகளையும் விட்டுச் சென்றிருக்கிறாள் என்பதைப் பத்மநாபனே வெகு சீக்கிரம் புரிந்து கொள்கிறார். அத்தனை கருத்துடன், பொறுப்புடன் அப்பாவையும் தம்பியையும் கவனித்துக் கொள்கிறாள், கோமளா. அம்மாவின் கடைசி விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முடியாமல் போன குற்ற உணர்ச்சி, அவளை வாட்டுகிறது. அதற்கு ஈடு கட்டுவது போல் அம்மாவை நினைத்து நினைத்து உருகிக்கொண்டே குழந்தை கோமளா தன் அப்பாவுக்குப் பணிவிடைகள் செய்கிறாள்; தம்பியைப் பாசத்துடன் வளர்க்கிறாள்.

## அத்தியாயம் 24

# இயற்கை வெல்லுமா?

**சா**ருலதா இந்தக் கதையைக் கூறி வருகையிலேயே அவள் மேனி பழைய நினைவுகளில் நடுங்குவதையும் முகத்தில் பயம், இரக்கம், பரிதாபம், வைராக்கியம், வேதனை போன்ற பல பாவங்கள் தோன்றுவதையும் கவனித்தான் வேணு கோபால். அனுதாபம் நிறைந்த உள்ளத்துடன் பரிந்து பேசினான்:

"எவ்வளவு சின்ன வயசில் எப்படிப் பட்ட பயங்கரமான அனுபவங்கள் உனக்கு!"

"யாருக்குமே நேர வேண்டாம் இப்படி!"

"சாரு, என்னை நீ மன்னித்துவிட வேண்டும். என் காதலை ஏற்காமல் என்னை நீ வதைப்பதாகக் குற்றம் சாட்டினேன் அல்லவா? அது ரொம்பப் பிசகு. இந்தக் கதையெல்லாம் எனக்கு ஏற்கெனவே தெரிந்திருந்தால் அப்படி உன்னைக் கோபித்துக் கொண்டிருக்க மாட்டேன்!"

"'நீயே எமனாக வந்து சேர்ந்துடுவே போலிருக்கே' என்று என் அம்மா என்னைத் திட்டினாள். அப்படியே நடந்து விட்டது!"

"அதெப்படிச் சொல்ல முடியும்? அந்த மாதிரி ஒரு நெருக்கடி நிலைமையில் பெரியவர்களுக்கே வெலவெலத்துப் போய்விடும். நீ அப்போது குழந்தையாக இருந்தும் எவ்வளவோ நிதானத்துடன் நடந்து கொண்டாய். சமய சஞ்சீவியாகச் செயல்பட முயன்றாய்."

"பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்த கதையாகச் சஞ்சீவியாகச் செயல்பட ஆரம்பித்து முடிவில் எமனாக விளங்கினேன்!"

"இதென்ன அசட்டுத்தனமான எண்ணம்? பகுத்தறிவுக்குப் பொருந்தாத பேச்சு? சாருலதாவா இப்படிப் பேசுகிறாள்?"

"சரி. நான் இல்லை என்றால் என் தங்கை என்று வைத்துக் கொள்ளுங்களேன். அம்மாவின் உயிரைக் குடித்து விட்டு அவளும் போய்ச் சேர்ந்தாள். ஆகக்கூடி அம்மாவுக்குப் பெண் எமன்!"

வேணு திடுக்கிட்டான். "என்ன சாரு! இப்படிப் பொதுப்படையாகப் பேசுகிறாய்?"

"பேசினால் என்ன? ஒவ்வொரு பிரசவமும் ஒரு கண்டம்தானே பெண்ணுக்கு? இல்லையென்று மறுப்பீர்களா டாக்டர்?"

"உன் அம்மாவுக்கு ஒரு குழந்தை எமனாக வந்து சேர்ந்தது என்பதால் உனக்கும் ஒரு குழந்தை எமனாக வந்து சேரும் என்று நிஜமாகவே நீ நம்புகிறாயா என்ன?"

சாரு வேறு பக்கம் திரும்பிக்கொண்டாள். "என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் மாற்றுக் கேள்வி தொடுக்கிறீர்கள்!"

"உன் தங்கை இறந்து பிறந்திருந்தாலும் உன் அம்மாவேனும் வீடு திரும்பியிருந்தால் நீ இவ்வளவு அதிர்ச்சி அடைந்திருக்க மாட்டாய். உன் தாயார் உனக்கு விஷயங்களைப் பக்குவமாக எடுத்துச் சொல்லி யிருப்பாள். தாய்மைப் பேற்றின் பெருமையை ஒரு தாய் தான் மகளுக்கு முழுமையாக உணர்த்த முடியும். தந்தை எவ்வளவுதான் பிரியமாக இருந்தாலும் இந்த விஷயத்தில் அவர் கையாலாகாதவர்தான்."

"பெற்றுப் போடுவதில் பெருமை என்ன இருக்கிறது? கஷ்டமும் வேதனையும்தான்!"

"அப்படி நீ எண்ணிப் பயப்படுவதில் அர்த்தம் இருக்கிறது சாரு. காதல், கல்யாணம் என்றெல்லாம் பேச்செடுத்தாலே நீ வெறுத்து ஒதுங்குவது ஏனென்றும் எனக்குப் புரிகிறது. ஆனால் தாய்மை என்பது வேதனை மட்டுமில்லை; அதற்கு மேலாக அளவிட முடியாத ஆனந்தமும் உண்டு."

"எனக்கு அந்த வேதனையும் வேண்டாம்; ஆனந்தமும் வேண்டாம்."

"உன் நிர்மாணம் இயற்கைக்கு விரோதமானது. இயற்கை வேகத்தை வெல்ல யாராலும் முடியாது."

"நான் அதை அடக்கி ஆண்டு எத்தனையோ காலம் ஆகிவிட்டது."

"நீ மனத்தில் சிறைப்படுத்தி வைத்திருக்கும் தாய்மை உணர்ச்சியை விடுவிக்கத்தானே நான் வந்திருக்கிறேன். இயற்கையின் வெற்றிக்கு ஆண்டவன் இங்கு என் மூலமாகச் செயல்படுகிறார்!" வேணு சிரித்தான்.

அவள் எழுந்தாள். "எனக்குத் தலையை வலிக்கிறது. நான் போய்ப் படுத்துக் கொள்கிறேன்!"

"ஒரு நிமிஷம்!" என்றான் வேணு. தோல் பையைத் திறந்து ஒரு பாட்டிலை எடுத்தான். மாத்திரைகளைப் பெற்றுக் கொள்ள நீண்ட சாருலதாவின் வலக் கரத்தைத் தன் இடக்கரத்தால் பிடித்துக் கொண்டு, பாட்டிலைச் சாய்த்து விரலால் தட்டி, அவள் உள்ளங்கையில் இரண்டு மாத்திரைகளை விழச் செய்தான். கூடவே, "உன் தலைவலிக்கு மாத்திரை கொடுப்பது போல் உன் மனத்துக்கு நானே மருந்தாக இருக்க ஆசைப்படுகிறேன், சாரு!" என்றான்.

அவள் உடம்பு நடுங்கியது. "வேணு! என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்!"-கெஞ்சுகிற தோரணையில் சொன்னாள்.

"இல்லை, சாரு! நான் உன்னை அவசரப்படுத்தவில்லை. என்னுடைய வாதங்களை உன்னிடம் சமர்ப்பிக்க அனுமதி கேட்கிறேன். அவ்வளவுதான். முடிவெடுக்கும் பொறுப்பு உன்னுடையது."

"நீங்கள் என்னை ஒரு முடிவுக்கு வரச் சொல்லவில்லை; என் முடிவை மாற்றிக் கொள்ளச் சொல்கிறீர்கள்!"

"சாரு! நீ பயப்படுவதில் அர்த்தமே இல்லை. நூற்றுக்கு ஒன்று அல்லது இரண்டு கேஸ்கள் கோளாறாகப் போகலாம். பாக்கி தொண்ணூற்று எட்டுப் பிரசவங்கள் எந்தவிதமான சிக்கலுமின்றி நடக்கின்றன. மேலும் ஒரு டாக்டரையே கணவனாக அடையப்போகிற உனக்கு இதைப் பற்றி என்ன கவலை?"

பேசியபடியே தோட்டத்திலிருந்து விட்டு வாசலை நோக்கி மெல்ல நடந்தார்கள்.

"இரண்டு மாத்திரைகளையும் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள். நான் சொன்னவற்றை நன்றாக யோசித்துப் பார்த்தபடியே தூங்கு" என்று அவளுடைய அழகிய அகன்ற கண்களைக் கனிவு ததும்பக் கூர்ந்து நோக்கியவாறே கூறி, விடை பெற்றுக் கொண்டான் வேணுகோபால்.

*

"என்ன டாக்டர், சாரு எப்போது ஆபீசுக்கு வருவாள்? பல முக்கியமான பைல்கள் அப்படி அப்படியே இருக்கின்றன" என்றான் சாரங்கன். வேணுகோபாலோடு பேச வேண்டும் என்று போனில் அவன் தெரியப்படுத்தவே எலைட் கிளப்பின் டென்னிஸ் கோர்ட்டுக்கு வரச் சொல்லியிருந்தான் வேணுகோபால். 'டர்க்கி டவ'லால் முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டே வேணு கூறினான்: "ஒன்றும் குடி முழுகிப் போய் விடாது. இன்னும் நாலு நாளைக்குப் பல்லைக் கடித்துக் கொண்டிருங்கள்."

"ஏதாவது முன்னேற்றம் உண்டா? புதிதாக ஏதாவது தெரிந்து கொண்டீர்களா?"

வேணு உதட்டைப் பிதுக்கினான். "சில விஷயங்கள் தெளிவாயின. வேறு பல இன்னும் மர்மமாகவே உள்ளன!"

"கடைசியில் எனக்குச் சீட்டுக் கிழிவதுதான் மிச்சம்!"

"ஏன் எதற்கு நீங்கள் பலியாக வேண்டும்?" ஒரு வாய் நீர் பருகி விட்டுக் கேட்டான் வேணுகோபால்.

"பின்னே, அன்று நான் அவ்வளவு தூரம் மரியாதை இல்லாமல் நடந்து கொண்ட பிறகு என்னைத் தொடர்ந்து வேலையில் வைத்துக் கொள்வாளா சாரு? ராஜிநாமாக் கடிதம் தயாராக வைத்திருக்கிறேன்."

வேணு சிரித்தான். "டோண்ட் வொர்ரி! அதையெல்லாம் நான் சரிக்கட்டி விட்டேன்."

"என்னைத் திட்டாமல் விட்டிருக்க மாட்டாளே!"

"திட்டவில்லை; ஆச்சரியப்பட்டாள்! 'மீசையை எடு என்றால் வழித்தெறிவான்; குடுமி வைத்துக் கொள் என்றால், 'ஆகட்டும்' என்று தலையாட்டுவான்! அப்படிப்பட்டவன் எப்படி மாறிப் போனான்!' என்று வியந்தாள்."

சாரங்கனின் முகம் சிவந்தது. "புதிய எஜமானி அம்மாள் ஆயிற்றே என்று அவள்விருப்பப்படி நடந்துகொண்டேன். அதை அவள் இன்னும் மறக்கவில்லை!"

"சாருவைப்போன்ற நிலையில் இருப்பவர்களுக்கு அப்படிப்பட்ட ஓர் அந்தரங்கக் காரியதரிசிதான் தேவை. பதில் பேசாமல், சரியா தப்பா என்று யோசிக்காமல் உத்தரவுகளை நிறைவேற்றிக் கொண்டு போகிறவர்களாயிருக்க வேண்டும்."

"ஆனால் இப்போது என்னிடம் அந்த நம்பிக்கை தகர்ந்திருக்குமே அவளுக்கு?"

"இல்லை. 'சாரங்கன் உனக்குத் துரோகம் செய்யவில்லை; நான் சொல்லிக் கொடுத்தபடி நடித்தான், அவ்வளவுதான்' என்று அவளிடம் கூறி விட்டேன் நான்."

"கோபம் தணிந்ததா சாருவுக்கு?"

"ஊம்; 'அப்படியானால் சாரங்கனைப் பற்றி நான் போட்ட கணக்குத்

---

அழகிய பூந்தோட்டச் சூழலில் சாருலதாவையும் வேணுகோபாலையும் இன்னிதழ் மேலட்டையில் சந்திக்கிறோம்.



# வாழ்வில் இன்பம் பன்மடங்காகும்

## உமக்கென ஒரு ஜெம் இருந்தால்

வாங்கிக்கொள்ளுங்கள் ஒரு ஜெம்...போகமயமான ஒரு புத்துலகம் உங்களை வரவேற்கும்...கடை கண்ணிக்குப் பல நடைகள் போக வேண்டியிராது...உணவுகள் அதிக நேரம் புதுமையோடு இருக்கும்... திடீர் விருந்தாளிகளைக் கண்டு திடுக்கிட வேண்டியதில்லை...அக்கம் பக்கத்தோரின் மெச்சும் விழிகள் உங்கள் மீது படரும் (பொறாமைக் கண்களும் கூட!) ஆம், உமது இல்லத்திற்கென ஒரு ஜெம் இருந்தால் இன்பம் பன்மடங்காகும். இனிமையான எழிலும் இடவசதியும் நிறைந்தது ஜெம். சேவைத்திறனும் சிக்கனமும் மிக்கது. சுருங்கக் கூறின், நல்ல ரெப்ரிஜிரேட்டருக்கு உள்ள எல்லாப் பண்புகளும் அதற்கு உண்டு. மேலும் உண்டு!

எடுப்பான இதர ஜெம் சிறப்புகள்:

▼ ரெப்ரிஜிரேட்டர்-டீப் ஃப்ரீஸர் இரண்டும் இணைந்தது ▼ தானாக இறுக மூடிக்கொள்ளும் புதிய ஆட்டோமேட்டிக் காந்தக் கதவு ▼ குறைந்த மின் செலவு. ▼ சேமிப்புக்கென அதிக அதிக இடப் பரப்பு ▼ ஐஸ், ஐஸ் க்ரீம் இரண்டையும் அதிவிரைவில் உருவாக்கும். ▼ ஓசையற்ற இயக்கம் ▼ உத்தரவாதமாகக் கட்டிறுக்கமாக மூடிய யூனிட்.

286 லிட்டர் மற்றும் 175 லிட்டர் கொள்ளளவுகளிலே கிடைக்கிறது. விலைவிகித ஒப்பந்தப்படி D.G.S. & D.யிடமும் கிடைக்கிறது.






விற்பனைக்கு விடுப்போர்:
ஜெனரல் எக்விப்மெண்ட் மர்சென்ட்ஸ் லிட்.
பம்பாய் • கல்கத்தா • சென்னை • அகமதாபாத்
• பெங்களூர் • சண்டிகார் • எர்ணாகுளம்-கொச்சின்
• ஜெய்ப்பூர் • லக்னௌ • செகந்தராபாத்
ரிஜி. ஆபீஸ்: N-75 கன்னாட் ஸர்க்கஸ், நியூ டெல்லி-1

தப்பவில்லை' என்று சொல்லிச் சந்தோஷப்பட்டாள்.''

''அன்றைக்கே அவள் கூர்ந்து கவனித்திருந்தால் என் கண்கள் கலங்கியிருப்பதைப் பார்த்திருக்கலாம். ரத்னசாமிக்குப் ஃபோன் பண்ணியிருந்தாலும் நான் அவரிடம், மங்களா பாங்க் கடன் கொடுத்த விஷயமாக எதுவுமே பேசவில்லை என்பதைத் தெரிந்து கொண்டிருக்கலாம்.''

''அவளுக்கு ஹிஸ்டீரியா மாதிரி வந்து கூச்சலிட, சொல்லி வைத்தாற் போல் அந்தச் சமயத்துக்கு நான் எப்படி அங்கு வந்து சேர்ந்தேன் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பார்த்திருந்தால் புரிந்து கொண்டிருக்கலாம். ஆனால் அன்று எதையுமே சரியாகச் சிந்தித்துப் பார்க்கும் நிலையில் அவள் இல்லை.''

''இப்போது எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு விட்டாளல்லவா ? அப்புறமும் ஆபீசுக்கு வராமல் எப்படி இருக்க முடிகிறது அவளால் ?''

''அவள் ஒற்றைக் காலில்தான் நிற்கிறாள்; நான்தான் தடுத்துக் கொண்டிருக்கிறேன்.''

''சீக்கிரமாக அவளுக்கு விடுதலை அளிக்கும் வழியைப் பாருங்கள். கவனிப்பாரில்லாமல் வேலைகள் குவிந்து கொண்டே போகின்றன.''

''வீட்டிலேயே அடைந்து கிடந்தால் அதுவும் அவளுடைய இப்போதைய மன நிலையில் பாதகமாக முடியக்கூடும். அதனால்தான் இன்று ஒரு புதிய யுக்தியைக் கையாளப் போகிறேன்.''

''என்ன அது?''

''அவளுடைய சிறு பிராயத்தில் நிகழ்ந்த சம்பவங்களைக் கேட்டறிந்து கடந்த ஐந்தாறு நாட்களாக மிகவும் அன்பாகவும் அனுதாபத்துடனும் அவளிடம் நடந்து கொண்டு வந்திருக்கிறேன். இப்போது அந்த 'டெக்னி'க்கை மாற்றிக் கோபமாகப் பேசப் போகிறேன் !''

இப்படிச் சொல்லிவிட்டு வேணு கோபால் டென்னிஸ் கோர்ட்டுக்குத் திரும்பினான். சாருவிடம் கோபப்படத் தைரியத்தைத் திரட்டிக் கொள்கிறவன் போல் பந்தை ஓங்கி அறைந்து வெளுத்துக் கட்டினான். முக்கால்வாசி ஷாட்கள் 'அவுட் சைட்'டாகிப் போனது பற்றி அவன் கவலைப்படவேயில்லை! **(தொடரும்)**

# ஆதன் தந்தை ஆந்தை









● அவர் 'கம்'மென்றிருக்கிறார் என்றால் ஒரு தொழிலும் செய்யாமல் சும்மா இருக்கிறார் என்றுதான் நாம் பொருள் கொள்ளுவோம். ஆனால் இந்த 'கம்'மிற்கு நாம் கொள்ளும் பொருளுக்கு நேர் எதிரிடையாக தொழில் என்று பொருளாம் அந்தக் காலத்தில்! சுவையாக இல்லையா? இதுபோல் வேறு பல சுவைகளையும் பார்க்கலாம்:

● 'செவிடு' என்ற பெயர் நம்முடைய காலத்தில் ''காது இல்லாதவன் செவிடன்'' என்ற பாலர் பாட வாக்கியத்தைத்தான் நினைப்பூட்டும். அக்காலத்தில் செவிடு என்பது ஒரு வகை முகத்தல் அளவைப் பெயராக வழங்கி வந்தது. ஆழாக்கில் ஐந்தில் ஒரு பங்குக்குச் செவிடு என்று பெயர்.

● 'ஆந்தை' என்ற பெயர் பழைய காலத்தில் மனிதர்களுக்கு வழங்கி வந்தது. கோட்டானில் ஒரு ஜாதிக்குப் பெயரான அது மனிதனுக்கு எப்படி வந்தது என்று நீங்கள் யோசிக்கலாம். ஆந்தை போல இருப்பார்களென்று வியாக்கியானம் செய்யலாம். அதெல்லாம் காரணம் அன்று. தொல்காப்பியர் காலத்தில் 'ஆந்தை' என்று ஒருவனை அழைத்தால் அவனுக்கு நிச்சயமாகப் பிள்ளை இருக்கிறான் என்று தெரிந்து கொள்ளலாம். அந்தப் பிள்ளையின் பெயர் 'ஆதன்' என்றும் தெரியலாம். ஆம். அந்த மனிதன் ஆதன் தந்தை. அவனை அவனுடைய மகனது பெயரைக் கொண்டு குறிப்பித்தார்கள். ஆதன் தந்தை ஆந்தை என்று மாறும். இப்படியே பூதன் தந்தைக்குப் ''பூந்தை'' என்று பெயர் வந்தது. சாத்தன் தந்தையைச் சாத்தந்தை என்று அழைத்தார்கள்.

● தமிழர்கள் தொல்காப்பியர் காலத்தில் பொழுது போக்குக்குப் பல விளையாட்டுகளை விளையாடி வந்தார்கள். சதுரங்கம் போன்ற சூதாட்டம் ஒன்றை அவர்கள் ஆடினார்கள். அதை ''வல்'' என்று சொல்லி வந்தார்கள். பலகையில் கட்டம் கிழித்து ஆடும் விளையாட்டு அது. அந்தப் பலகைக்குப் பல்லப் பலகை என்று பெயர். அவ்விளையாட்டில் உபயோகப்படும் காய்களை ''நாய்'' என்று வழங்கினர். இப்பொழுதும் கட்ட விளையாட்டில் காய்களை நாய் என்று சொல்வது வழக்கம்.

**திரு கி. வா. ஜ.வின் 'பயப்படாதீர்கள்' என்ற நூலிலிருந்து.**

**தகவல்: வி. ச. வாசுதேவன்.**

# ஒரு நபரைச் சுற்றி

(எங்கள் ஆபீஸ் ஸ்டெனோ லலிதா, என்னை ஒரு ஞாயிற்றுக்கிழமை தன் வீட்டிற்கு வரும்படி அழைத்திருந்தாள். எனக்கு லலிதாவை மட்டுமே தெரியும். அவள் வீட்டில் வேறு யாரையும் தெரியாதபோது புதிய இடத்துக்குப் போக சங்கோஜம் ஒருபுறம்; அழைப்பை அலட்சியப்படுத்துவதாக லலிதா எண்ணிவிடக் கூடாதே என்ற நினைவு ஒருபுறம். 'சரி, போய் வருவோம்' என்ற உறுதியுடன் கிளம்பிச் சென்றேன். போகும்போதே ஒரு கற்பனை. ஒரு மணி நேரம் அவள் வீட்டில் தங்கியிருந்துவிட்டுக் கிளம்பினால் அங்கே என்னைப் பார்த்தவர்கள் என் தலை மறைந்ததும் என்னென்ன கருத்துக்கள் தெரிவித்துத் தங்களுக்குள் பேசிக்கொள்வார்கள் என்பதை எண்ணியபடியே வழி நடந்தேன்.)

மாலை ஐந்து மணி. பெரிய பட்டணத்தில் ஒரு வீடு. பின்கட்டில் குடியிருப்பவரைப் பார்த்தாக வேண்டும். முன்புற வாசலில் வீட்டுச் சொந்தக்காரப் பாட்டி 'ஜுடாரு' பார்வை பார்த்தபடியே நிற்கிறாள். ஒருவர் காம்பௌண்டுக்குள் தயங்கியபடி நுழைகிறார்.

பாட்டி: யாரைப் பார்க்கணும்? (கழுகுப் பார்வையில் வந்தவரை 'எடை' போடுகிறாள் – கண்களாலேயே.)

வந்தவர் (ஒரு பதிலும் சொல்லத் தோன்றாமல் மௌனமாக நிற்கிறார்.) உடனே ஒரு சிறுமி ஓடி வந்து நிற்கவே. என்ன பாப்பா! இங்கே லலிதா என்று யாராவது இருக்கிறார்களா?

சிறுமி (உற்சாகத்துடன்): ஓ... லலிதாவா? இப்படி வாங்க. (வந்தவர் சிறுமியைப் பின்தொடர அவள் அவரை அந்தப் போர்ஷனுக்கு அழைத்துச் செல்கிறாள்)

சிறுமி (உரத்த குரலில்): லலி! லலி! யாரோ உன்னைத் தேடி வந்திருக்கிறா....

லலிதா: யாருடி!... ஓ! நீங்களா? அம்மா, அம்மா! அவர் வருவாருன்னு சொல்லியிருந்தேனே, இதோ வந்துட்டாரம்மா.

அம்மா: வாருங்கள். லலி நேற்றிலிருந்து சொல்லிக் கொண்டிருந்தாள். உட்காருங்கள்!

லலிதா தன் சிநேகிதிகளான பத்மா, பட்டு லீலா, அனசூயா ஆகிய நால்வரையும் வந்தவருக்கு அறிமுகம் செய்து வைக்கிறாள். 'ஒர்க்கிங் வுமன்' ஹாஸ்டல் வாழ்விலிருந்து சற்றே விடுதலை பெற்ற அந்த நால்வரும் லலிதா போர்ஷனுக்கு அடுத்துள்ள ஒரே அறையில் தங்கிச் சமையல், சாப்பாடு, ஆபீஸ் போவதை செய்துகொண்டிருப்பவர்கள். இவர்களைத் தவிர வழிகாட்டியாக வந்த சிறுமி உமா, லலிதாவின் அப்பா, அம்மா, வீட்டுக்காரப் பாட்டி ஆகிய ஒன்பது பேரும் அன்று வந்து போன புதிய நபரைப் பற்றி இதோ பேசப் போகிறார்கள்:

பாட்டி: ஏண்டி லலி! யாருடி அது? ஆராரோ யாராவது காம்பௌண்டுக்குள் வரா நான் யாருன்னு விசாரிச்சா பதில் கூடப் பேசாமல் உள்ளே போறாரே?...





"உலகமே ஒரு நாடக மேடை என்கிறார்கள். ஆனால் ஒத்திகை பார்க்க மட்டும் அனுமதிப்பது இல்லையே! இது ஏன்?"

— 'பாலி'

லல்லி: யாருமில்லே பாட்டி! எங்க ஆபீஸ் ஹெட்-கிளார்க்தான். நான்தான் இன்னிக்கு லீவுதானேன்னு வீட்டுக்கு வரச் சொல்லி யிருந்தேன். வந்தார்... ரொம்ப நல்லவர், பாட்டி.

பாட்டி (சுவாரசியமில்லாமல்): அப்படியா? எல்லோரும் நல்லவாதான், யார்தான் கெட்டவா? என்னமோம்மா, நீ சின்னஞ்சிறுசு. வேலைக்குப் போறேன்னு வெளியே கிளம்பி யிருக்கே. காலம் கெட்டுக் கெடக்கு. யாரையும் நம்ப முடியல்லே. நீதான் ஜாக்கிரதையா யிருக்கணும். எனக்குத் தோணினதைச் சொன்னேன். ஒண்ணும் தப்பா நெனச்சுக்காதே!

லல்லி (பொறுமை இழந்து): பாட்டி! சிவன் கோவிலிலே கதை ஆரம்பிச்சிருப் பாளே...' நீங்க போக வேண்டாமா? கிளம்புங்க... மணி ஏழு.

லீலா: பத்மா! உங்க ஆபீஸ் 'ராமநாதனே பரவாயில்லே போலிருக்கே! உனக்காகத்தான் ஆபீசுக்கு வரேன்னு அந்த அசடு சொல்லும்னு சொல்லுவியே! லல்லி ஆபீஸ் 'ராமநாதன்' அவளைப் பார்க்க வீட்டுக்கே வந்துடுத்தே! பாவம், ஒரு நாள் லீவில்கூட அவளைப் பார்க்காமல் இருக்க முடியாது போலிருக்கே!

லல்லி: ஏய், அரட்டை! வாயை மூடு. ஜாக்கிரதை!

பட்டு: சேச்சே! பாவம்டி! என்னைக் கூப்பிட்டு லல்லி 'இன்ட்ரட்யூஸ்' பண்ணிக் கொண்டே, மூன்றுபேர் டிபனை ஒரே தட்டில் வைத்து அவர் கையில் கொடுத்ததும் தட்டையும் என்னையும் மாறிமாறித் 'துக்கக்' மாதிரி பார்க்கிறார். போதாக் குறைக்கு அவருக்கு வத்தல் குழம்பு பிடிக்கும்னு சொல்லி, தோசை மேலே ஊற்றுவது போதாதென்று கண்ணிலும் ஸ்ப்ரே பண்ணினதும்...

(பட்டு, லல்லி, பத்மா, அனசூயா, லீலா யாவரும் பலமாகச் சிரிக்கின்றனர்.)

பத்மா: அது போகட்டும். ஏன் லல்லி! என்ன, ஒரு தர்ட்டி, தர்ட்டி த்ரீ இருக்குமா, வயசு?

லல்லி: அவ்வளவுதான் இருக்கும்னு நினைக்கிறேன்.

லீலா: என்ன, அவ்வளவுதானு? ஏன், ரொம்பக் கம்மின்னு நெனைக்கிறியா?

பட்டு: போங்கடி மண்டுகளா! குறைஞ்சது நாற்பது இருக்கும்! தலைதான் 'ஸில்வர் வயரிங்'கா மாறிண்டு வரதே, தெரியலே?

(லல்லியின் அம்மா பேச்சில் கலந்து கொள்ள வரும்போது வந்தவரின் வயசுப் பேச்சு அடிபடுகிறது.)

அம்மா: இப்ப அவர் வயசு தெரிஞ்சு நீங்க என்ன செய்யப் போகிறீர்கள்? அவருக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து. அடுத்த மாதம் கோயமுத்தூரில் நடக்கப் போகிறது. தெரியுமா?

பத்மா: பேஷா நடக்கட்டும் மாமி! நான் வேண்டுமானாலும் லாலி பாடுகிறேன்!

ஒரு பெண் குரல் (லீலாதான் பாடுகிறாள்): "...காதலுக்குத் தெய்வமான சீதாராமன்!... ராமன் எத்தனை ராமனடி...."

பட்டு: . வந்து போன தாரக ராமனைச் சேர்த்து எட்டு ராமனடி!

லீலா: என்னவோம்மா, பார்த்தவரையிலும் ரொம்ப 'ஹார்ம்லெஸ்' டைப்பாத்தான் தெரியறது. இல்லையா பத்மா?

அம்மா: இதென்ன அதிசயம்? நீங்கள் பார்த்தப்புறம் சொல்கிறீர்கள். லல்லி ஆபீஸில் செய்கிற தப்புக்கெல்லாம் மானேஜரிடம் 'அர்ச்சனை' அவர்தான் வாங்குகிறார் என்று லல்லி சொன்னபோதே நான் சொல்லி விட்டேனே...அது ஒரு 'அம்மாஞ்சி'யாகத் தான் இருக்கும்னு.

'ஓ!' என்ற கோரஸ் சிரிப்பு எழுந்து அடங்குகிறது.

பத்மா: பட்டு! சிரிச்சது போதும்டீ. லல்லிக்குக் கோபம் வந்துண்டிருக்கு. ஜாக்கிரதை!

லல்லி: போங்கடி அசடுகளா! எனக்கு ஏன் கோபம் வருகிறது? இங்கே நீங்கள் எல்லோரும் அவரிடம் எப்படிப் பேசிப் பழகினீர்களோ, அதே மாதிரிதான் நானும் ஆபீஸில் பேசுவேன், பழகுவேன், தெரியுமா?

பத்மா (இயல்பான குறும்புச் சிரிப்புடன்): ஆல் ரைட்! நீ சொல்வதை அப்படியே நம்புகிறோம். மறுக்கவில்லே. நீ அப்படி... ஆனால் அவரோ? — இப்போது பாடப் போவது ஒரு சினிமாப் பாட்டே தவிர யாரையும் குறிப்பிடுவது அல்ல (பாடுகிறாள்)

"...ஒரு ராஜா ராணியிடம் வெகு நாளாக ...வெகு நாளாக ஆசை கொண்டான்... அவள் வேண்டும் வேண்டும் என்றான் அவன் நாளை நாளை என்றாள்...(ஒரு)"

எல்லோரும் சிரிக்கிறார்கள். லல்லி மட்டும் முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு தனக்குள் 'கஷ்டகாலம்! இவர் எங்கே வரப் போகிறார்' என்ற தைரியத்தில் 'வீட்டுக்கு வாருங்கள், ஸார்!' என்று சொல்லி வைத்தேன். நான் கண்டேனா, இது நிஜமாகவே வந்து நிற்கும் என்று!.... ஹூம்! (பெருமூச்சு விடுகிறாள்.)

கூட்டம் கலைகிறது.

**(என் சிந்தனையும் கலைகிறது- லலிதா வீட்டுக்குப் போக இனியும் எனக்குத் தைரியம் வருமா என்ன? பேசாமல் திரும்பி விடட்டுமா? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?)**

# மீண்டும் ஃப்ளூ படையெடுப்பு!




உங்களுடைய, உங்கள் அன்பிற்குரியவர்களுடைய ஆரோக்கியத்தை ஃப்ளூ குலைத்துவிடும்.

ஃப்ளூவை எதிர்ப்பதற்குச் சுலபமான வழி பலநிறங்கொண்ட ஸால்ஜான் உபயோகிப்பதுதான்.

ஸால்ஜான் நிரந்தரமாக ஃப்ளூவை எதிர்க்கும் சக்தியுடையது. அதனால் அது ஃப்ளூவால் பாதிக்கப்படுபவர்களால் பெரிதும் விரும்பப்படுகிறது.

நினைவிருக்கட்டும்! ஃப்ளூவையும், அதுபோன்ற நோய்களையும் எதிர்த்து நிச்சய நிவாரணம் பெற உதவுவது ஸால்ஜான்.

ஸால்ஜான் ஒரு ஸ்மித்,
ஸ்டானிஸ்ட்ரீட் தயாரிப்பு

ஃப்ளூவை
எதிர்க்கும் அதிக சக்தி
வாய்ந்த நிவாரணி



## ஸால்ஜான்
## கைவசம்
## வைத்திருங்கள்

**வீ**ரய்யன் மூக்கின்மேல் விரல் வைத்து விட்டான்.

"மணிமேகலையை வரச் சொல்லித் தந்தி கொடுத்திருக்காங்களா? யாருடா சொன்னது?" என்று வேலைக்காரப் பையன் முத்துவைக் கேட்டான்.

"நான்தானே தபாலாபீசுக்குப் போய்க் கொடுத்துட்டு வந்தேன். சின்ன எஜமான் அனுப்பிச்சாரு.......?"



"தம்பியா?" என்று கேட்டான் வீரய்யன். மற்றவர்களுக்குச் சின்ன எஜமானாக இருக்கும் சேகர் அவனுக்கு மட்டும் தம்பி. "என்கிட்ட சொல்லவே இல்லியே.... ஸ்டேஷனுக்குக் கார் கொண்டு போக வேணும்?"

"மறந்துட்டிருப்பாரு."

"போடா, இருக்கா! தம்பியாவது என்கிட்டே சொல்றதுக்கு மறக்கிறதாவது?" என்று பெருமைப்பட்டுக் கொண்ட வீரய்யனின் மனத்தில் சட்டென்று ஒரு எண்ணம் பிறந்தது. உண்மையிலேயே தம்பி சொல்லத்தான் மறந்திருக்குமோ — இந்தப் பதிலைத் தவிர நாடகமாக அது தன்மைத்திலும் இல்லியே!

"நானே ஒரு வார்த்தை கேட்டுட்டு வந்துடறேன்" என்று சொல்லிய வீரய்யன், காரைத் துடைத்துக் கொண்டிருந்த வேலையை அரைகுறையாக நிறுத்தி விட்டுச் சேகரின் அறைக்குப் போனான். அறை என்றால் காங்கிரீட் கவர் வைத்துக் கட்டி, 'ஏர் — கண்டிஷன்' செய்யப்பட்டதல்ல. நாலா பக்கங்களிலும் மேலேயும் புத்தம் புதிய கீற்றுகள் வைத்துப் பின்னப்பட்ட ஓர் ஆசிரமக் குடில்தான் அது. ஆனால் கட்டு செட்டாகப் பார்ப்பதற்குக் கண்ணை அள்ளியது.

"மணிமேகலையை எதுக்காகத் தம்பி வரச் சொல்லி, தந்தி கொடுத்தீங்க?" என்று அந்தரங்கமான ஒரு கேள்வியைக் கேட்டு விட்டு, பின்பு தற்போதுள்ள சூழ்நிலையில் அப்படி ஒரு கேள்வி கேட்பது அதிகப் பிரசங்கித்தனமாகப் போய் விடுமோ என்று பயந்தும் கொண்டான் அவன்.

"சும்மாத்தான் வீரய்யா.... சும்மாத் தான்...." என்று பதில் வந்தது சேகரிடமிருந்து. அது வீரய்யனுக்குத் திருப்தியாகவே இல்லை. ஆனாலும் மணிமேகலை வரப் போகி

ருள் என்று நினைவு மட்டும் நெஞ்சை நிரப்பியது. மணிமேகலை வருவதில் அவனுக்குக் கொள்ளை மகிழ்ச்சிதான். ஆனாலும் —

'தந்தி கொடுத்து வரவழைக்க வேண்டிய அவசியம் இப்போது என்ன அவசரம் என்பதுதான் அவனுக்குப் புதிராகவும் கவலையாக



# கன்னிகா தானம்

ச.கே.டி.துரைராசன்

வும்கூட இருந்தது. தம்பியைக் கேட்டால் சொல்ல மாட்டேன் என்கிறது. எதையோ மூடி மறைக்கிறது. இனிமேல் அம்மாவைத் தான் கேட்க வேண்டும்.'

அன்று மாலை ஐந்து மணிக்கு ரயில் நிலையத்துக்குக் கார் புறப்பட்டது. சேகர் ஓட்டிக் கொண்டு வர வீரய்யன் பின்னால் அமர்ந்து கொண்டான்.

இரு பக்கங்களிலும் புளிய மரம் பேயாட்டம் வளர்ந்திருக்கும் நெடுஞ்சாலையில் சிறிது தூரம் வரை இருவரும் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. ஒரே காரில் போனாலும் மிகவும் விலகியிருப்பது போன்ற உணர்வை உண்டாக்கும் அந்த மௌனத்தை முதலில் சேகர் கலைத்தான்.

"வீரய்யா! மணிமேகலை வாழ்வைப் பற்றி என்னவோ ஏதோன்று நினைக்கத் தடுமாற வேண்டாம். சமயம் வரும்போது நானே உன்னிடம் சொல்கிறேன். அதுவரை..."

"பரவாயில்லை தம்பி. தெரிந்துதான் நான் என்ன செய்யப் போறேன்!" என்று இடைமறித்தான் வீரய்யன். தம்பியும் சொல்ல வேண்டாம், அம்மாவும் சொல்ல வேண்டாம். மணிமேகலை கட்டாயம் சொல்லிவிடும் என்று தைரியம் அவனுக்கு.

மறுபடியும் அவர்கள் மௌனிகளானார்கள்.

தூரத்தில் புகை மண்டலம் தெரிந்தது. வண்டி வந்து கொண்டிருக்கிறது. ஆம்! மணிமேகலைதான் வந்து கொண்டிருக்கிறாள்.

வண்டியின் பெயரே பாசஞ்சர். சரக்கு மூட்டைகளைப் போட்டு அடைத்த மாதிரி ஏகமான பிரயாணிகள். வீரய்யன் இரண்டாம் வகுப்புப் பெட்டியை நோக்கி ஓடினான். சேகர் அங்கிருந்தும் பார்த்தபடி அந்த இடத்தில் நின்று கொண்டிருந்தான். அவன் நின்ற இடத்துக்கு எதிரில் வந்து நின்ற பெட்டியிலிருந்து ஒரு பெண் இறங்கினாள்.

மணிமேகலைதான் அது. சேகர் பரபரப்போடு அவளை நோக்கி விரைந்தான். முகத்தில் பூப்போன்றதொரு புன்னகை மலர, தாமரை இதழ்கள் குவிந்து விரிவதைப் போல் சேகரைப் பார்த்து வணக்கம் தெரிவித்தாள் மணிமேகலை. சில வினாடிகளுக்கு முன்புவரை வெறிச்சோடியிருந்த அந்த அநாதை ரயில் நிலையத்துக்கு இப்போது ஒரு சோபை வந்துவிட்டது மாதிரி இருந்தது.

இதற்குள் வீரய்யன் மறு திசையிலிருந்து ஓடி வந்தான். மணிமேகலையைப் பார்த்ததும்

உடன் பிறப்பைப் பார்த்தது போல் அவள் முகத்தில் பொங்கியது மகிழ்ச்சி!

"வீரண்ணா!" என்று வாய் நிறைய அழைத்தாள் மணிமேகலை. ஆம்! அவளைப் பொறுத்தமட்டில் வீரய்யன் அவளுக்கு அண்ணன்தான்.

"அம்மா சௌக்கியமா? ஸ்டேஷனுக்கு அவங்க வந்திருப்பாங்கன்னு ஆசை ஆசையாய்ப் பார்த்தேன்."

"அம்மாவுக்கு நாலு ஐந்து நாளா உடம்பு சரியில்லே!" என்றான் சேகர். மணிமேகலையின் மலர் முகம் சட்டென்று இருண்டது. தந்தி கொடுத்தது அதற்காகத்தானோ என்று ஒரு பயங்கரமான தவிப்பு. சேகர் அதை உடனே புரிந்து கொண்டான்.

"கவலைப்படுவதற்கு ஒன்றுமே இல்லை மணிமேகலை. அது ஒரு சளி இருமல். அம்மா மருந்து சாப்பிட்டிருந்தால், எப்பொழுதோ குணப்பட்டிருக்கும்..."

"அம்மாவினுடைய குணமே அதுதான்", என்று சலித்துக் கொண்ட மணிமேகலை, "உங்களுடைய தந்தி வந்ததும் நீங்கள் மறுபடியும் வெளிநாட்டுக்குப் போகப் போகிறீர்களோன்னுதான் நினைச்சேன். நீங்ககூட சொல்லிக் கொண்டிருந்தீர்களே!" என்றாள்.

"இல்லை; இல்லை. நான் வெளிநாட்டுக்குப் போகவில்லை. ஆனால் வெளி நாட்டிலிருந்துதான் ஒரு நண்பர் நாளைக்கு நம் ஆசிரமத்துக்கு வருகிறார்!" என்றான் சேகர்.

"யார் அது?"

"அமெரிக்கர். பேராசிரியராக இருக்கிறார். நான் அங்கே போயிருந்தபோது இருவரும் நெருங்கிய நண்பர்களாகி விட்டோம். அவர்தான் இப்போது வருகிறார்."

"பேராசிரியரா? அப்படியென்றால் வயதானவரா?"

"இல்லை. இல்லை. என்னைவிட இரண்டு மூன்று வயது அதிகம் இருக்கும். பிரெண்டர்யங் என்று பெயர். தங்கமானவர்."

சேகர் சொன்னதைப் போல் பிரெண்டர்யங் மிகவும் இளைஞராகவே காணப்பட்டார். அவர் அணிந்திருந்த ஜிப்பா வேஷ்டியும் அகன்ற நெற்றியும் நீண்ட மூக்கும் கண்களும் அவரது இளமையைச் சற்று அதிகரித்தே காட்டின. இருந்தாலும் உடல் வாகு, நடை உடை பாவனைகள், பேச்சில் இருந்த மிடுக்கு, பிறர் உள்ளத்தை ஊடுருவித் துளைக்கும் பார்வையின் பிரகாசம் ஆகிய இவை அனைத்தும் சேகருக்கும் அவருக்கும் அதிக வயது வேறுபாடு இராது என்பதை உணர்த்தின.

அந்த உணர்விலும் 'இவரா புரொபஸராக இருக்கிறார்?' என்று உள்ளூற வியந்தாள் மணிமேகலை.

அடுக்கு மாடிக் கட்டிடங்களுக்கிடையில் வாழ்ந்த அவருக்கு, தமிழகத்தில் ஒரு சாதாரண நகரம் எத்தகைய உணர்வை ஏற்படுத்தியதோ? சுற்றும் முற்றும் பார்க்கத் தொடங்கினார் அவர்.

இதற்குள் வீரய்யனும் மற்றொரு புரைவரும் அவரது பெட்டி படுக்கைகளை எடுத்துக் காரில் வைக்கத் தொடங்கினார்கள். அவர்களுக்கு உதவியாகச் சேகரும் அந்த வேலையில் ஈடுபடவே யங் மணிமேகலையின் பக்கமாகத் திரும்பி, "உங்கள் பெயர் என்னவென்று சொன்னீர்கள்?" என்று கேட்டார்.

"மணிமேகலை" என்றான் சேகர்.

"உங்கள் நாட்டில் எல்லோரும் கடவுள் பெயரையே வைத்துக்கொள்வார்களாமே...? இந்தப் பெயரும் அப்படித்தானோ?"

"இல்லை. இது ஓர் இலக்கியத் தலைவியின் பெயர். அந்தத் தலைவி என்ன செய்தாள், தெரியுமா? இளம் வயதிலேயே புத்த மதத் துறவியாகி — மக்களுடைய பசிப் பிணியை அகற்றப் பாடுபட்டாள்..."

"அப்படியா?"

பிறகு முத்துக்குமரப்பர் ஆசிரமத்தைப் பற்றிச் சேகர் சுருக்கமாகக் கூறினான். தன் தந்தை முத்துக்குமரப்பர் பழுத்த காந்தியவாதி என்றும், அவர் மறைவுக்குப் பின்னர் அவரது நினைவாக அந்த ஆசிரமம் ஏற்படுத்தப்பட்டதாகவும், கடந்த பதினைந்து ஆண்டுகளாக ஆசிரம வாழ்க்கைதான் தன் அன்னைக்கு மன அமைதியைக் கொடுக்கிறதென்றும், தனது வாழ்க்கையையும் அந்த ஆசிரமத்தின் வளர்ச்சிக்காகவே அர்ப்பணித்து விட்டதாகவும் அவன் உருக்கத்தோடு சொல்லிக் கொண்டு வந்து, "ஆசிரமத்திலேயே வளர்ந்து உருவானவள்தான் மணிமேகலை" என்று கூறி நிறுத்தினான்.

அவர்கள் பேச்சு எங்கெல்லாமோ போய்க் கடைசியில் தன்னிடத்தில் வந்து முடிந்ததைக் கண்டதும், மணிமேகலை—

"ஆதரவற்றவர்களுக்கு இது ஒரு சொர்க்கம்" என்று குரல் தழுதழுக்கக் கூறினாள்.

"அப்படியா?" என்று கேட்ட யங் "பெண்களுக்கு மட்டும்தான் உங்கள் ஆசிரமத்தில் இடம் உண்டா?" என்று வினவினார்.

"ஆமாம். அவர்களை நல்ல முறையில் வளர்த்து உருவாக்கி விட்டால்தான் எதிர்காலச் சமுதாயம் கட்டுக்கோப்பு சிதறாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியும். ஏனென்றால் எங்கள் முன்னோர்கள் சமுதாய வாழ்க்கையையே பெண்களின் கையில் ஒப்படைத்து விட்டார்கள்" என்றான் சேகர்.

"மிகவும் நல்ல காரியம் — எங்கள் முன்னோர் அதைச் செய்யத் தவறிவிட்டார்கள்" என்று கூறிய யங், அப்படி அவர்கள் செய்யத் தவறிய அந்தக் காரியத்தை இனிமேலாவது யாராவது வந்து செய்ய மாட்டார்களா என்று ஏங்குவது போல் நெடியதொரு பெருமூச்சு விட்டார்.

சாலையின் இடதுபுறமாகத் திரும்பி அந்தக் கார் ஆசிரமத்துக்குள் பிரவேசித்தது. யங் தங்குவதற்கென்று ஏற்பாடு செய்யப்பட்ட தனிக் குடிலின் முன் கார் போய் நின்றது. முதலிலேயே வந்துவிட்ட வீரய்யன் பெட்டி படுக்கைகளை அலுங்காமல் குலுங்காமல் உள்ளே கொண்டு போய் வைத்து விட்டு, வெளியிலேயே காத்துக் கொண்டிருந்தான். சேகரின் அன்னை யங்கிடம் விடை பெற்றுக் கொண்டு போய்விட்டார்.

அந்தக் குடில் யங்குக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. கட்டுப்பாடு மிகுந்த லட்சாதிபதி வீட்டுக் குழந்தைகளை விருப்பம் போல் தெருவில் விளையாட விட்டால் அவர்களுக்கு எப்படி இருக்குமோ அப்படி ஒரு நிறைவும்,

# துரிதமாக. ஜாக்கிரதையாக. நிச்சயமாக.

# எப்படி?

இப்போது இடையில் நிற்காதபடி ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகரத்திற்கு நேராக எங்கள் லாரிகளைச் செலுத்துகிறோம். இந்த துரித சர்வீஸை எங்கள் வாடிக்கையாளர்கள் பெரிதும் வரவேற்கின்றனர். ஏனெனில் இத்துறையில் பார்சல்களை மேலும் துரிதமாக, ஜாக்கிரதையாக கொண்டு சேர்க்க முடிகிறது. இது போன்ற துரித சர்வீஸ்களை நாங்கள் மேலும் விரிவுபடுத்தி பல நகரங்களை நேரிடையாக இணைத்து வருகிறோம்.
இந்த சர்வீஸை வியாபாரிகள் சமூகம் மிக மிக வரவேற்கிறது. ஏனெனில் வியாபாரத்திற்கான சாமான்கள் ஜாக்கிரதையாக தடங்கலின்றி அடைவதால் அவர்கள் தேவையான அளவே ஸ்டாக் செய்கின்றனர். இதனால் அவர்கள் மூலதனத்தை அநாவசியமாக முடக்கத் தேவையில்லை.

**இந்த சிறப்பான பணி ஸதர்ன் ரோட்வேஸிலும் எப்படி முடிகிறதென்றால்:**

- தனியார் துறையில் ஸதர்ன் ரோட்வேஸ் நிறுவனமே மிகவும் பெரிய ஸ்தாபனம்.
- அவர்கள் தங்களுக்குச் சொந்தமான லாரிகளையே இயக்குகிறார்கள்.
- அவர்களின் பயிற்சி பெற்ற ஊழியர்கள், லாரி ஸ்தாபனத்தின் ஒவ்வொரு இயக்கத்தையும் தனித்தனியே கண்காணிக்கின்றனர்.
- இவர்களின் டிரைவர்கள், உடலியலும், உளவியலும் பொருந்த நடத்தும் பரிசோதனைகள், மற்றும் தூரத்தைப்பற்றி மதிப்பிடும் பரிசோதனைகள், கண் பார்வையிட கச்சித ஒத்துழைப்புக்கான பரிசோதனைகள் ஆகியவற்றிற்கு உள்ளாகிய பிறகுதான் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள்.
- 100 லாரிக்கட்டு ஒன்றுவீதம் டிப்போ, மற்றும் பராமரிப்புக்கான வசதி கொண்ட தொழில் பட்டறைகள் அமைத்திருக்கிறார்கள்.

இக்காரணங்களால் தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், மைசூர், கேரளம் முதலிய மாநிலங்களின் மக்களிடை ஸதர்ன்ரோட்வேஸ் பெருநம்பிக்கை பெற்றிருக்கிறது.

ஓரிடத்திலிருந்து
மற்றொரு இடத்திற்கு
நேரிடை
பார்சல் சர்வீஸ்



உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்




ஸதர்ன் ரோட்வேஸ்
பிரைவேட் லிமிடெட்
(இது ஒரு டிவிஎஸ்
ஸ்தாபனம்)
மதுரை

அவர்கள் இருவருக்குமிடையில் ஏதோ பேச்சு வார்த்தை நடந்திருப்பது போல் தெரிந்தது.

''வீரய்யா! மணிமேகலையோடு நான் தனியாகச் சில வார்த்தைகள் பேச வேண்டும். எனக்கும் உனக்கும் உள்ள தகராறைப் பிறகு வைத்துக் கொள்ளலாம்'' என்றான் சேகர்.

வீரய்யன் முதலில் சேகரையும், அதற்குப் பின் தன்னையும் சிறிது நேரம் பார்த்துவிட்டுத் தலை குனிந்தபடி வெளியேறியது மணிமேகலைக்குச் சிறிது அச்சத்தைக் கொடுத்தது. தன்னைப் பற்றித்தான் அவர்கள் இவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருந்தார்களா ?

''என்ன தகராறு ?''

''ஒன்றுமில்லை மணி. இப்படி உட்கார். சொல்லுகிறேன். நம் விருந்தாளி யங்கோடு நீ வெளியில் போக வர இருப்பது வீரய்யனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லையாம். ஆசிரமத்திலும் பெண்கள் சிலரும் அவன் காது பட ஏதோ பேசிக் கொண்டார்களாம்.''

மணிமேகலையின் உள்ளத்தில் இனந் தெரியாத ஒரு சுமை வந்து இறங்கியது. சேகரிடம் கேட்க வேண்டும் என்று கடந்த இரண்டு மூன்று நாட்களாகவே அவள் உள்ளத்தில் முட்டிமோதித் தெளிந்து கொண்டிருந்த கேள்வி இப்போது நாக்கின் நுனியில் வந்து நின்றது.

''இதில் என்ன தவறு இருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை மணி. மேல்நாடுகளுக்குப் போய்விட்டு வருபவர்கள், அங்கு அவர்கள் சென்ற பெரும்பாலான இடங்களுக்குத் தக்க வழிகாட்டியாகவும் பேச்சுத் துணையாகவும் பெண்கள்தான் வந்ததாகக் கூறுகிறார்கள். அமெரிக்காவுக்கு நான் போயிருந்த பொழுதும் பல சமயங்களில் அப்படித்தான் நேர்ந்தது. அதை அவர்கள் விருந்தோம்பல் என்று மட்டுமே நினைக்கிறார்கள். ஆனால் நாம்....? ஓ ! நாம்தான் எவ்வளவு மோசமான சந்தேகப் பிராணிகளாக இருக்கிறோம் !'' என்றான் சேகர்.

அந்த விமர்சனத்துக்கு மணிமேகலையால் அப்போது தகுந்த பதில் கொடுக்க முடியும். இந்தச் சமுதாயத்தின் கட்டுக்கோப்புகள் — மரபுகள் அத்தகையவை என்று ஒரே வார்த்தையில் மறுப்பு சொல்லியிருக்க முடியும். ஆனால் அவள் சேகர் பேசுவதைத் தான் கேட்க விரும்பினளே தவிர, தான் ஏதுவும் பேச விரும்பவில்லை.

அந்த விருப்பத்தைத் தகர்ப்பவனைப்போல், ''நீ என்ன சொல்கிறாய் மணி ?'' என்று கேட்டான் சேகர்.

சோதனையான கேள்விதான் !

'' இது வரையில் போய் வந்தது சரி. ஆனால் இனி மேல் அப்படி வேண்டாம் '' என்றாள் மணிமேகலை பார்வையைத் தரையில் பதித்தபடி. சிறிது நேரத்துக்கு முன்பு நெஞ்சில் இறங்கிய அந்த இனந் தெரியாத சுமையால் இப்போது அவள் கண்கள் கலங்கத் தொடங்கின. இத்தனை காலமும் இருந்த இடம் தெரியாமல் இருந்துவிட்டு, இந்த நான்கைந்து நாட்களுக்குள் ஏன் இப்படி ஆகி விட்டோம் என்ற ஒரு உணர்வான தவிப்பு.

சேகர் அந்தப் பதிலை எதிர்பார்க்கவில்லை.

''அப்படியானால் நாளைக்கு நீ அவரோடு கோடைக்கானல் போக விரும்பவில்லையா ?''

''இதற்கு நான் என்ன பதிலைச் சொல்ல முடியும்? வீரய்யன் சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு.''

''வீரய்யனை இழுக்க வேண்டாம். ஆசிரமத்துப் பெண்கள் ஏது வேண்டுமானாலும் பேசிக் கொண்டு போகட்டும். உன் எண்ணத்தைச் சொல் !''

அவள் எண்ணமா ? அதுதான் அவளுக்கே தெரியவில்லையே.....

அவள் தலையை அரைத் தூக்கலாய்த் தூக்கிச் சேகரைப் பார்க்காமல், சேகருக்குப் பின்புறமாக இருந்த மின் தொட்டியைப் பார்த்த பொழுது, விளக்கின் ஒளியில், அவளது கண்களுக்கு பொட்டிட்டதுபோல் மின்னிய நீர்த் துளிகளைக் கண்டதும் சேகரின் இதயத்தில் ஒரு கடல் பொங்கியது.

''ஏன் அழுகிறாய்?'' என்று விக்கித்துப் போய்க் கேட்டான் அவன்.

''ஒன்றுமில்லை'' என்று புடவைத் தலைப்பால் கண்களை ஒற்றி எடுத்துக் கொண்ட மணிமேகலைக்குத் திடீரென்று யங்கின் நினைவு வந்தது. தன் கண்களில் துளிர்த்த நீரை இப்பொழுது அவர் பார்த்திருந்தால்... சே ! இது என்ன மனம்? காரண காரியமில்லாமல் அவரை நினைத்துக் கொள்கிறது.

''மணி! யங் இருக்கும் வரையில் நீ அவரோடு வெளியில் போய் வருவது சிறு விஷயம். அது பற்றிய உன் எண்ணத்தை அறிந்து கொள்வதற்காக மட்டும் நான் உன்னிடம் அந்தக் கேள்வியைக் கேட்கவில்லை. அதைவிட வேறொரு முக்கியமான விஷயத்தில் உன் கருத்தை அறிந்து கொள்வதுதான்....''

அவன் சொல்லி முடிக்குமுன் மணிமேகலையின் வாயிலிருந்து அந்தக் கேள்வி உதிர்ந்தது.

''அவர் இங்கே வருவதையொட்டி என்னை ஏன் சேவாகிராமத்திலிருந்து வரவழைத்தீர்கள் ?''

ஓ ! சுற்றி வளைத்துக் கொண்டு இடப்பதற்குப் பதிலாக மணிமேகலை பிரச்னைக்கே வந்து விட்டாள். அவனுக்கு அது ஒரு வகையில் திருப்திதான்.

''அதுவா ? அதைச் சொல்வதற்கு எனக்கு நிறைய வார்த்தைகள் வேண்டும். அதைப் புரிந்து கொள்வதற்கும் உனக்குப் பெரிய மனம் வேண்டும். உண்மை... உன்னிடத்தில் பெரிய மனம் இருக்கிறது. ஆனால் என்னிடத்தில் வார்த்தைகள் இல்லையே !'' என்று சொல்லிய சேகர், கவரைப் பிரித்து, அதிலிருந்த வெளிர் நீல நிறக் காகிதங்கள் மூன்றினை எடுத்துப் புரட்டிப் புரட்டிப் பார்த்தான்.

'' இந்தக் கடிதத்தில் அவர் அழகாக எழுதி விட்டார். தம் உள்ளத்தை அப்படியே திறந்து காட்டி விட்டார். ஆனால் எனக்குத் தான் அதை எப்படிச் சொல்வதென்று தெரியவில்லை'' என்று கூறிய சேகர், ''பாவம் யங் ! அவருக்குத்தான் எத்தகையதொரு புதுமையான ஏக்கம் இருக்கிறது. அமெரிக்கராகப் பிறந்துவிட்டு ஓர் இந்தியப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறார் என்றால்....!'' என்றும் இழுத்தான்.

அவ்வளவுதான். மணிமேகலையின் விழிகள் திகைப்பினால் விரிந்து விட்டன. அந்தக்

# செல்லப் பாப்பாவுக்கு யூ:ஃபோம் "பாம்பினோ"





குழந்தையின் சுகம், பாதுகாப்புக்காகவே அமைக்கப்பட்ட மெத்தை. லேசானது. தண்ணீரில் நனைந்து சுத்தம் செய்யலாம். பலவகை வண்ண உறைகள், தலையணைகள், அணைப்புகளுடன் கிடைக்கின்றன. மேலும் குழந்தைகளுக்காக மடியில் வைத்துக்கொள்ள மிருதுவான வீட்டுகள், பொம்மைகள், தள்ளுவண்டி மெத்தைகள்.

தயாரிப்போர்:
யூ:போம் பிரைவேட் லிமிடெட்

விநியோகஸ்தர்கள்: தமிழ்நாடு & கேரளாவுக்கு: சதர்ன் வேர்ஹவுஸ் கம்பெனி 38/3, மவுண்ட் ரோடு, சென்னை-6 (போன்: 81437) ஷோரூம்கள்: மேற்கண்ட விலாசத்திலும் 163, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14லும் உள்ளன. பிராஞ்சுகள்: 17/82, ஒப்பணக்காரத் தெரு கோயமுத்தூர்-1 ★ XXI/348-A, மகாத்மா காந்தி ரோடு, எர்ணாகுளம், கொச்சின்-11

---

சுகத்திலே சுகவீனத்திலே
பெண்கள் எப்போதும்
நம்பியிருப்பது

**லோத்ரா**





ஆரோக்யத்திற்கும்
மகிழ்ச்சிக்கும்
சிறந்த டானிக்

65 ஆண்டுகட்கும் மேலாக
புகழ்பெற்றது

**கேஸரி குடீரம் (பி) லிட்.**
15, வெஸ்ட்காட் ரோடு
ராயப்பேட்டை, சென்னை-14

தமிழ்நாட்டுக்கு ஏஜண்டுகள்:
**சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்**
மேலக் கோபுரத் தெரு, மதுரை

---

# எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன்மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து நிக்ஸோடெர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடெர்ம் (Nixoderm) நிச்சயமாக அழிக்குமென்று பூர்ண நம்பிக்கையுடன் வாங்குங்கள்:



நெருங்கி உறவாடும்,

நெஞ்சைக் கவரும் நறுமணமுள்ள

# லக்மே டால்கம்

உங்கள் இதயம் கவரும் நறுமணத்தை மணிக் கணக்கில் வீசிக்கொண்டிருக்கும் டால்கம்—நெஞ்சை விட்டகலாத லக்மே! அந்த இணையற்ற இன்பத்தை அனுபவிக்கத் தாமதமேன்? இன்றே உங்கள் மேனியின் மீது இன்மணம் கமழும் லக்மே டால்கம் தூவுங்கள். அது பட்டுப் போன்று மென்மையானது: நேர்த்தியானது: இணைபிரியாதது. ஒரு கனிவ 'லக்மே' சோலைத் துய்க்க, இதை விட இன்பம் தருவது வேறென்ன இருக்கப் போகிறது?

இது ஐவகை மணம் வீசி, உங்கள் அன்புடன் அணியாய் வருகிறது. லேவெண்டர், வெட்டிவேர், ஜிவான், சந்தனம் ஆகிய நான்கும், மீடியம் மற்றும் எகானமி சைஸ்களிலே வருகின்றன. இந்தவகைகளுடன் ஃப்ளோரல் மிஸ்ட் பெரிய ஃபேமிலி சைஸில் வருகிறது. எல்லாமே உங்கள் சக்திக்குள் வாங்கக்கூடிய விலையில்; எல்லாமே இன்ப மணம் எல்லாமே இன்ப மயம்!

திகைப்போடு சேகரையே வெறித்துப் பார்த்தான்.

"உன்னைப் போல்தான் கடிதத்தைப் பார்த்துவிட்டு நானும் சில விநாடிகள் திகைத்துப் போனேன்! நான்கைந்து முறை படித்தேன்... ஒவ்வொரு முறையும் திகைப்பு வளர்ந்ததே தவிரக் குறையவில்லை."

சேகர் மறுபடியும் அந்தக் கடிதத்தைப் புரட்டுகிறான்.

"மணி! ஓர் இடத்தில் அவர் எழுதியிருக்கிறார்" என்று சேகர், அந்த ஆங்கில வாசகங்களை அப்படியே தமிழில் சொல்லத் தொடங்கினான்.

"அந்த நிறைவை நான் இங்கேயுள்ள ஓர் அமெரிக்கப் பெண்ணிடத்தில் பெற்றுக் கொள்ள முடியாதா என்று நீங்கள் கேட்கலாம். என்னைப் பொறுத்த வரையில் அது முடியாதுதான். ஏனென்றால், நிறைவு என்பது என்ன? நிறையப் பணம் உள்ள மனைவியாய் இருந்தால் நிறைவு வந்து விடுமா? அவள் அழகாய் இருந்தால் போதுமா? அல்லது கணவனின் முகம் கோணாமல் நடந்து கொண்டு மகிழ்ச்சி தந்தால் அது நிறைவா? 'ஆம்' என்று ஒத்துக் கொண்டால் அமெரிக்கப் பெண்களிடம் இந்த எல்லாம் இருக்கின்றன. ஆனால் நான் தேடுவது — இவை மட்டுமல்ல. வேறொன்றும் எனக்கு வேண்டும். கணவனை வாழ்க்கையின் துணையாக — அல்லது பங்குதாரராக நினைக்காமல்—அவனைத் தெய்வமாக மதிக்கும் ஒரு பெண்ணைத் தேடுகிறேன். அப்படி நினைப்பதில்தான் வாழ்க்கையின் அர்த்தங்களெல்லாம் பூரணத்துவம் பெறுகின்றன. எப்படியென்றால் தெய்வத்தின் சக்தியை மீறிப் பக்தன் எதுவும் செய்ய மாட்டான். அதே போல் பக்தனின் பிரார்த்தனைகளை அலட்சியப்படுத்திவிட்டுத் தெய்வம் எதுவும் செய்யாது! அதனால்தான் கணவனிடத்தில் அன்பாக மட்டுமல்ல பயபக்தியோடும் நடந்து கொள்ளும் ஒரு பெண்ணை, அந்தப் பண்பு இந்தியப் பெண் குலத்தின் உயிர்க் கருவாக இருப்பதால், ஓர் இந்தியப் பெண்ணை மணந்துகொள்ள விரும்புகிறேன்."

கடிதத்தின் ஜீவனை இந்தப் பகுதியைச் சொல்லி விட்டு, மணிமேகலையை ஏறிட்டு நோக்கினான் சேகர்.

"அவருடைய விருப்பப்படி குடும்பத்தைக் கோவிலாகவும், கணவனைத் தெய்வமாகவும் மதிக்கும் இலக்கணத்துக்கு இலக்கியமாகத் திகழக்கூடிய ஓர் இந்தியப் பெண்ணை, இந்தச் சமுதாயத்தின் சார்பில் அவருக்குத் தாரை வார்க்கும் கடினமான பொறுப்பு எனக்கு ஏற்பட்டு விட்டது. அவர் பூரணத்துவம் பெற்ற வாழ்க்கைக்காக ஏங்குகிறார். அந்த ஏக்கத்தை உன்னால் தீர்க்க முடியுமென்று எனக்கு நிச்சயமாகத் தெரிந்தாலும், நீ ஒத்துக் கொள்வாயோ மாட்டாயோ என்று வெகு நாட்கள் தயங்கிக் கொண்டிருந்துவிட்டுக் கடைசி நிமிஷத்தில் உனக்கு அம்மாவின் அனுமதியுடன் தந்தி கொடுத்தேன். மணி! உன்னைப் பார்த்த விநாடியிலிருந்தே அவர் உன் வடிவத்தைத் தமது உள்ளத்தில் வாங்கி வைத்துக் கொண்டார். உன்னோடு



முதல் கணக்கிற்கு விடை மேலே.

2-ன் விடை 31 சதுரங்கள்.

ஆதாரம்: ஸ்ரேட் - "ரமணி"

---

பேசுவதை அவர் பேரின்பமாகக் கருதுகிறார். இதெல்லாம் எனக்குத் தெரியும். ஆனால் வெளிப்படையாக அவர் என்னிடம் எதுவும் கூறவில்லை. நானாகப் பார்த்து எந்தப் பெண்ணைத் தேர்ந்தெடுத்திருந்தாலும், அவர் மனப் பூர்வமாக ஏற்றுக் கொண்டிருப்பார். அந்த அளவு என் மேல் நம்பிக்கை வைத்திருக்கும் அவருக்கென உன்னிலும் சிறந்தவளை நான் எங்கே போய்த் தேடுவேன்! உன்னைத் தம் மனைவியாகப் பெற்றால் அவர் மிகவும் கொடுத்து வைத்தவராவார்....." என்று கூறிய பொழுது சேகரின் குரல் நெகிழ்ந்திருந்தது.

"இல்லை. அவரைக் கணவராக அடைய நான்தான் கொடுத்து வைத்திருக்க வேண்டும்" என்றாள் மணிமேகலை, அதே அழுகையுடன்.

ஒரு பெண் தன் இசைவை இதைவிடத் தெளிவாக உணர்த்த முடியாதல்லவா!

"இந்த நல்ல செய்தியை நான் இப்போதே அவருக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று கூறிவிட்டு வேகமாகக் குடிலின் கதவைத் திறந்து கொண்டு பங்கின் குடிலை நோக்கிப் போனான் சேகர்.

மணிமேகலை சிறிது நேரம் அமர்ந்தது அமர்ந்தபடி செயலற்றிருந்தாள். பேசி முடித்ததெல்லாம் ஏதோ ஒரு கனவு போல் அவளுக்குத் தோன்றியது. தனது உள்ளம் எப்படி இவ்வளவு காலத்தில் இசைந்தது என்பதும், அந்த இசைவை எப்படி இவ்வளவு அழகாக வெளிப்படுத்திவிட்டோம் என்பதும் அவளுக்கு மலைப்பாக இருந்தது.

பங்கிடம் அந்த நல்ல செய்தியைச் சொல்லிச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, கையோடு, இரவு உணவையும் முடித்துக்கொண்டு சேகர் தன் குடிலுக்குத் திரும்பிய பொழுது இரவு பத்து மணி ஆகி விட்டது.

உடலுக்கும் உள்ளத்துக்கும் சரியான களைப்பு. ஆனால் உறக்கந்தான் வராது.

இரு கண்களையும் மூடியபடியெல்லாம் சில விநாடிகள் மௌனத்திலிருந்து விட்டு, பின்னர் அவன் கண்களைத் திறந்த பொழுது, குடிலின் கதவைத் திறந்து கொண்டு வீரய்யன் உள்ளே நுழைவதைப் பார்த்தான்.

"வா.... வீரய்யா ? சாப்பிட்டாச்சா ?''

"நீங்க சாப்பிட்டீங்களா?'' கேள்விக்குப் பதில் கேள்வி போட்டான் வீரய்யன்.

அட கடவுளே! இவன் யாருக்குப் போட்டியாக அல்லவா பேச வந்திருக்கிறான்.

"உட்கார் வீரய்யா! நீ நிக்கிறியே.... உன்னோடு சில விஷயங்கள் பேச வேண்டுமென்று நானும் நினைத்திருந்தேன். உட்கார் !''

வீரய்யன் மௌனமாக உட்கார்ந்தான்.

"வீரய்யா ! இது ராத்திரி நேரம். நாம் மெதுவாய்ப் பேசினாலே பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கேட்கும். ஆவேசத்திலே ஏதாவது கோபத்திலே நீ சத்தம் போடக் கூடாது. ஏன் சொல்றேன்னா....''

"எனக்குத் தெரியும் தம்பி. நல்லாத் தெரியும். கலப்பான காரியமின்னாலும், கொஞ்சம் ஏறுக்குமாறான இந்தக் கல்யாணத்தைப் பற்றி. அது நல்லவிதமாக நடந்து முடியறவரையிலும் மற்றவங்க அதிகமாகத் தெரிஞ்சிக்காமல் இருக்கிறது நல்லதுன்னு எனக்கு ரொம்ப நல்லாவே தெரியும். ஆனால் எனக்குத் தெரியாதது என்னாலே புரிஞ்சிக்க முடியாதது வேறே ஒண்ணு இருக்கு....''

"தம்பி ! அந்த அமெரிக்கக்காரருக்குத் தாரை வார்க்க உங்களுக்கு மணிமேகலை தானா கிடைச்சது ? எத்தனை பொண்ணுக இந்த ஆசிரமத்திலே இருக்காங்க. அவங்களிலே ஒருத்தர் உங்க கண்ணுக்குப் படலியா? மணிமேகலைதான் வேணுமின்னு அவர் சொன்னாரா?'' என்று வினவினான் வீரய்யன்.

"அவர் சொல்லலே வீரய்யா. ஆனால் அப்படிச் சொல்லாததினாலேயே நான் யாராவது ஒரு பெண்ணை அவருக்குத் தேர்ந்தெடுத்துக் கொடுத்துவிட முடியுமா? இந்த ஆசிரமத்திலே அப்படி யாராவது இருக்காங்களான்னு சொல்லு. பார்ப்போம். கொடுக்கிறதுதான் கொடுக்கிறோம்; உயர்வானதைக் கொடுக்கலாமே!''

"கொடுக்கிறதைப் பற்றிப் பரவாயில்லே. ஆனால் இன்னொரு மணிமேகலைக்கு நீங்க எங்கே போவீங்க ?''

அம்பு போன்ற இந்தக் கேள்வி சேகரின் மனத்தில் ஆழச் சென்று பாய்ந்தது. ஒரு சில விநாடிகள் திகைத்துப் போனான் அவன்.

"என்ன சொல்றே வீரய்யா?''

"நான் எதுவும் சொல்றதுக்காக வரலே தம்பி. கேட்கிறதுக்காக வந்திருக்கேன். என் கேள்விக்கு நீங்க பதில் சொல்லுங்க. இந்த மணிமேகலை போயிட்டா இன்னொரு மணிமேகலை உங்களுக்கு எப்படிக் கிடைக்கும்?''

வீரய்யன் இந்தக் கேள்வியைக் கேட்கும் வரையிலும் அவனையே பார்த்துக் கொண்டிருந்த சேகர், இப்போது விருக்கென்று தன் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டான்.

"இப்படித் திரும்புங்க தம்பி. இப்படித் திரும்பி உண்மையைக் கொஞ்சம் பாருங்க. மணிமேகலை மேலே உங்களுக்கு எவ்வளவு ஆசையும் பாசமும் இருக்குதுன்னு எனக்குத் தெரியும்'' என்று சொன்னபோது வீரய்யனின் கனத்த சரீரம் ஆவேசத்தில் பிசிறு பிசிறாய்ச் சிதறியது.

"வீரய்யா ! நாம் விரும்புகிற ஒரு பொருளை அந்தப் பொருளுக்காக நம்மைவிட அதிகமாக ஏங்கக்கூடிய ஒரு நண்பருக்காகக் கொடுத்தோம்ங்கிற திருப்திதான் — எனக்கு ஏற்படுது. மணிமேகலையைக் கல்யாணம் செய்துக்கலாம்னு ஏன் — மணிமேகலையைத்தான் கல்யாணம் செய்துக்கணும்னு நான் ஆசைப்பட்டது உண்மை. அவள் ஒரு சிறந்த மனைவியாக விளங்குவாள்னு எனக்கு நல்லாத் தெரியும். அப்படித் தெரிஞ்சதாலேதான் நான் என்னுடைய ஆசைகளை அடக்கி வச்சி அப்படியே அழிச்சிட்டேன். அது தப்பா ? ஆசையை அடக்கிவிட்டது தப்புன்னு சொல்லுவீங்க ? வீரய்யா ! நம்ம நாடு மற்றவங்க கிட்டே வயிற்றுப் பசிக்காகக் கையேந்துகிறது. ஆனால் இந்த அமெரிக்கக்காரரோ வாழ்க்கைப் பசிக்காக நம்மிட்டே கையேந்திவிட்டார். அந்தக் கை நிறைய அள்ளிக் கொடுக்கிற கடமைதான் எனக்கும் பெரிசா இருந்ததே தவிர, என்னோட கனவுகள் எல்லாம் ரொம்ப ரொம்பச் சிறிசாப் போயிடுச்சு'' என்று உணர்ச்சி மேலிட்டுக் கூறிய சேகர், "அந்தக் கனவுகளிலே ஒண்ணுகூட இப்பொழுது என்கிட்டே இல்லே'' என்று நிம்மதியான ஒரு பெருமூச்சோடு சொன்னான்.

பிறகு தொடர்ந்து, "ஒண்ணுமில்லே, வீரய்யா ! ஒரு மனுஷனுக்குக் கல்யாணம்ங்கிறது ஒரே ஒரு முறைதான் நடக்கும். அது மணப் பந்தலிலேதான் நடக்கணும்னு கட்டாயமில்லே. பக்கத்திலே மணமகள் இருக்கணும்ங்கிற அவசியமுமில்லே. அந்தக் கல்யாணம் அவனுடைய மனசுக்குள்ளேயும் நடக்கலாம். அப்படி மனசுக்குள்ளேயே கல்யாணம் ஆன பிறகு — அவனுக்கு இன்னொரு கல்யாணம் எதுக்கு ?'' என்றான்.

"தம்பி !'' என்று கத்தி விட்டான் வீரய்யன்.

"வீரய்யா !'' என்று சன்னமான குரலில் அழைத்தான் சேகர். "யங் கூடிய விரைவில் அமெரிக்காவுக்குத் திரும்பிவிட வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறார். அதனால் இன்னும் நான்கைந்து தினங்களுக்குள் திருமணத்தை முடித்து அவர்களைக் கோலாகலமாக வழியனுப்ப வேண்டும். நேராக அவர்கள் அமெரிக்காவுக்குப் போகப் போவதில்லை. இந்தியாவின் பல பகுதிகளுக்கும் சென்று பார்த்துவிட்டு, தேனிலவுக்காக காஷ்மீர் வரை போகிறார்கள். அங்கே சில நாட்கள் தங்கியிருந்தபின், அமெரிக்காவுக்குப் பயணமாவார்கள். அதனாலே கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாம் 'விறுவிறு'வென்று செய்யணும். என்ன சொல்றே?'' என்று கேட்டான் சேகர்.

வீரய்யன் தன் இரு கைகளையும் பரக்க நீட்டியவாறே தாவி வந்து சேகரை அணைத்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதான்.

"இது வெறும் கல்யாணம் மட்டுமில்லே தம்பி! கன்னிகாதானம் — கன்னிகாதானம்'' என்று, அந்த அழுகையோடு அழுகையாகவே ஏதோ ஒரு பெருமிதத்துடன் கூறினான் வீரய்யன்.

அப்போது நடுநிசிக்குள் வீசிய மெல்லிய காற்று அந்தப் புனிதமான வார்த்தையைத் தாங்கிக் கொண்டு ஆசிரமம் முழுதும் பரவியது.

KS.C.1469 TM

# க்ருஷென்

## எந்த வயதிலும் உங்களை 'இளமையோடு' இருக்கச் செய்கிறது




தினமும் க்ருஷென் சாப்பிட்டு என்றும் இளமையோடு விளங்குங்கள். க்ருஷெனில் சரிசமமாகச் சேர்ந்துள்ள முக்கியமான ஆறு தாது-உப்புகள் மலச்சிக்கல், மூட்டுவலி, ஈரல் மற்றும் மூத்திரப்பைக் கோளாறுகள், பிடிப்பு வலி முதலியவை வராமல் தடுக்கின்றன.

**க்ருஷென் உங்களை இளமையோடு வைத்திருப்பதன் விதம் இதுதான்:** மூத்திரப் பைகளைக்கழுவுகிறது • ஈரலை நன்றாக இயங்கச் செய்கிறது • இரத்தத்தை சுத்தமாக்க உதவுகிறது • மலச்சிக்கல் அகல உதவுகிறது • ஜீரண சக்தியைப் பெருக்குகிறது • பசி பெருக்க வைக்கிறது • மூட்டுவலிகளை அகற்றுகிறது.

எளிய முறையில் என்றும் இளமையோடு விளங்க தினந்தோறும் ஒரு ஸ்பூன் **க்ருஷென்** சாப்பிடுங்கள்.

---

# நாளை என்று ஒன்றுண்டு-அதை நினைத்தால் நமக்கு வாழ்வுண்டு.



ஒரு கணம் நினைத்துப்பாருங்கள். உங்கள் பிற்கால வாழ்விற்காக, உங்கள் குடும்பத்திற்காக சேமித்திருக்கிறீர்களா? ... சேமிக்கவில்லையா? பரவாயில்லை நாளைய தேவைக்கு இன்றே ஆரம்பியுங்கள் ஓர் சேவிங்ஸ் கணக்கு தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்கில்.




வட்டி தினசரி நிலுவையின் பேரில் அளிக்கப்படுகிறது.
செக் மூலம் பணம் பெற்றுக் கொள்ளலாம்.

## தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க் லிமிடெட்



பதிவு அலுவலகம்: 1087, மிஷன் தெரு, தஞ்சாவூர்

K. V. சச்சிதானந்த மூப்பனார்—சேர்மன்

B. K. மாதவன்—செக்ரட்டரி

VSK. TPB-109

# டாப் ரகசியம்!



புதிய பினகா டாப் மட்டிலுமே, மறைந்துள்ள பாக்டீரியாக்களை ஒழிப்பதற்கென, பற்பசையை வாயின் எல்லாப் பகுதிகளிலும்—பல்லிடுக்குகளிலும், ஈறுகளிலும்—பரப்பும் ரகசியப் பொருள் அடங்கியுள்ளது. எனவே நீங்கள் நாள் முழுவதும் வாயில் 'டாப்' தூய்மையைப் பெறுவீர்கள்!

என்ன சான்று என்று கேட்கிறீர்களா? ஆராய்ச்சிக் கூடத்தில் நிரூபிக்கப்பட்ட இந்தச் சோதனையை நீங்களே செய்து பாருங்கள்!



முதலில், கண்ணாடித் தட்டு ஒன்றில் சிறிதளவு தண்ணீர் ஊற்றிக் கொள்ளுங்கள். இந்த நீரில் சிறிதளவு கரிப் பொடி அல்லது காப்பிப் பொடியைத் தூவுங்கள்.



சிறிதளவு நீரில் பினகா டாப் கலந்து, கலவையின் ஒரு துளியை கண்ணாடித் தட்டின் நடுவில் தெளியுங்கள்.



பினகா டாப் எப்படி எல்லாத் திசைகளிலும் அதி வேகமாகப் பரவி... அழுக்கை அகற்றி, தண்ணீரை நிர்மலமாக ஆக்குகிறது என்பதைக் கண்கூடாகக் காணீர்கள்.




**பினகா டாப்**... தூய்மையான வாய்ப் பாதுகாப்பின் 'டாப்' ரகசியம்!




மேற்கு ஜெர்மனியில் ஜான் டீர் ஸ்தாபனத்தினர் உருவாக்கிய அறுவடை இயந்திரம். லார்சன் அண்டு டெளபுரோ ஸ்தாபனத்தினர் இதன் செயல் திறனை அமைச்சர் ஸ்ரீமதி சத்தியவாணி முத்து தலைமையில் நிரூபித்துக் காட்டினர். ஒரே சமயத்தில் இந்த இயந்திரம் அறுவடை செய்து தானிய மணிகளை உதிர்த்து, தரவாரியாகப் பிரித்து, மூட்டைகளில் நிரப்பி விடுகிறது.

## நான் கூற விரும்பும் ஒரு யோசனை

இன்றுள்ள சூழ்நிலையில் கிராமசேவக்கின் பணி மகத்தானது. நேரடியாக விவசாயிகளுடன் பழகி, அவர்களுக்குத் தேவையான ஆலோசனைகளை வலியச் சென்று தந்து, அந்த ஆலோசனைகளை நடைமுறையில் நிறைவேற்ற அவர்களுடன் ஒத்துழைத்து, மேலும், அரசாங்கத்திலிருந்து தரப்படுகிற உதவிகளையும் அவர்களுக்குப் பெற்றுத் தந்து, விவசாயத்துக்குச் சிறந்த சேவை செய்பவர் 'கிராம சேவக்'. இன்று ஒவ்வொரு விவசாயியின் குடும்பத்துக்கும் அந்தக் குடும்ப அங்கத்தினராகத் திகழக் கூடிய பெரும் வாய்ப்பைப் பெற்றவர் அவர்.

தாலுக்காவைப் பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு 'கிராம சேவக்' நியமிக்கப் படுகிறார். ஒவ்வொரு பிரிவிலும் சில கிராமங்கள் அடங்குகின்றன. அதனால் நிறைய மக்களுடன் பழகி, அவர்களின் தேவைகளை நிறைவேற்றித் தருகின்ற பெரும் பொறுப்பு 'கிராம சேவக்'குக்கு உண்டு.



பொதுவாக ஒரு பகுதியில் ஒரு 'கிராம சேவக்' சுமார் மூன்று ஆண்டு காலம் மட்டுமே பதவி வகிக்க அனுமதிக்கப்படுகிறார். அப்புறம் அவரை வேறு ஓர் ஊருக்கு மாற்றி விடுகிறார்கள். இப்படி மாற்றப்படுகின்ற அவர் வேறு ஒரு பகுதிக்குச் சென்று அங்குள்ளோரிடம் (எல்லோரும் புதியவர்களாயிற்றே!) பழக நீண்ட நாட்களாகி விடுகின்றன. அது சிரமமாகவும் போய் விடுகிறது.

'ஓர் ஊரின் மணியக்காரரையோ அல்லது கர்ணத்தையோ வேறு ஊருக்கு மாற்றுவதில்லை. ஏனெனில் ஒரு பகுதியை நன்கு தெரிந்து செயலாற்ற அவர்களை மாற்றாமலிருப்பதுதான் உசிதம். கிட்டத்தட்ட மணியக்காரரையும், கர்ணத்தையும் போன்று மக்களுடன் நெருங்கிப் பழகி, ஒவ்வொரு பகுதியையும் புரிந்து கொண்டு செயலாற்றுகின்ற 'கிராம சேவக்'கை ஏன் ஊருக்கு ஊர் மாற்ற வேண்டும்? ஒருசமயம், பதவி உயர்வை முன்னிட்டு அவரை மாற்றுவதைத் தவிர அதுவரை அவரை ஊரை விட்டு ஊர் மாற்றக்கூடாது.

மாமரத்துத் தோட்டம்
21-1-70 மு. தவசியப்பன்

## முயற்சி திருவினையாக்கும்!

“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்” என்பதை மறந்து, எனக்குடைய நிலம் வளமற்றது, உழைத்தால் அதற்கேற்ற பலன் கிடைப்பதில்லை என்ற ஐயத்தால், வியாபாரம் செய்வதில் நாட்டம் கொண்டேன். நிலையற்ற வருமானம் உடையதாயிருந்தாலும் வாணிகத்தில் பணப் புழக்கம் இருந்ததால் விவசாயம் செய்வதில் கவனம் செலுத்தவில்லை. பல ஆண்டுகள் சென்றன. நான் மேற்கொண்ட வியாபாரத்தில் பெரும் பொருள் இழப்பு ஏற்பட்டது. எனக்கு உதவி செய்ய யாரும் முன்வரவில்லை. அப்பொழுது தான் என் நிலைமையை உணர்ந்தேன். மன வேதனையடைந்தேன். நிலமென்னும் நல்லாள் என்னைப் பார்த்து நகைப்பது போலப்பட்டது. நடந்தவற்றை எண்ணினேன். எனது முயற்சியையும் அறிவுடைமையையும் விவசாயம் செய்வதில் காட்டினேன். நிலத்துக்கு நன்றாக உரமிட்டேன். நீர் பாய்ச்சினேன். விவசாய அலுவலர்களின் உதவியைத் தேவைப்பட்டபோதெல்லாம் நாடினேன். பருவத்தே பயிர் செய்தேன். என் முயற்சி வீண் போகவில்லை. உழைப்புக்கு ஏற்ற ஊதியம் என்னைத் தேடி வந்தது. 1955–56ம் ஆண்டு நெல் விளைச்சல் போட்டியில் ஏக்கருக்கு 7790.00 பவுண்டு விளைவித்ததற்காக எனது தாலுக்காவில் முதல் பரிசை சர்க்கார் எனக்கு அளித்துக் கௌரவித்தபோதுதான் “முயற்சி திருவினையாக்கும்” என்பதை அறிந்தேன்.



அரசம்பாளையம்பட்டி.
19-1-70 அ. செ. பழனியப்பன்

# மாலினியின் பயம்

**வாதூலன்**



**மா**லினிக்கு வியர்த்துக் கொட்டியது. 'ஆல்பத்தை'ப் 'புரட்டிக்' கொண்டிருந்த அவள் விரல்கள் நடுங்கின. எந்த நிமிடத்திலும் அந்தப் போட்டோ ஆல்பம் அவள் கையிலிருந்து கீழே நழுவிவிடும் போலிருந்தது.

''என்ன? எப்படி இருக்கிறது படம்? சொல்லவே இல்லையே! சங்கரின் சிரித்த முகம் நன்றாக விழுந்திருக்கிறதில்லே?'' என்று நெருங்கி வந்து மாலினியின் தோளைப் பற்றிக் கேட்டான் வசந்தன்.

''இதுதானே! பிரமாதம் போங்கள்!'' என்று வலிய ஒரு புன்னகையை வெளிக்கொணர்ந்தாள் மாலினி. வேகமாகப் படபடவென்று ஆல்பத்தின் பக்கங்களைத் திருப்பினாள்.

மாலினியால் எதையுமே சரியாகப் பார்க்க முடியவில்லை. எந்தப் பக்கத்தைப் புரட்டி விட்டாலும் சங்கர் காட்சி அளிக்கும் புகைப்படத்தைக் கண்டவுடன், சற்றுக் கோபத்துடனே, ''என்ன இது மாலினி! சங்கர் என் பழைய சிநேகிதன். ரொம்ப முக்கியமான காரியம் இருந்தும் கூடக் கல்யாணத்துக்கு வந்திருந்தான். அதைப் போய் நீ வேண்டாம் என்கிறாயே! நோ, நோ. ஸ்கிப் இட்!'' என்றான்.

'சங்கர்! சங்கர்!' திரும்பத் திரும்ப இந்தப் பெயர்தானா? மாலினிக்குக் கோபமும் பயமும் ஒருங்கே எழுந்தன. எதை மறக்க முயன்றாளோ, எந்த ஞாபகத்தை வேரோடு கிள்ளி எறிய முயன்றாளோ, அந்த நினைவு நிரந்தரமாய்க் குடியிருக்கிறது! அதன் சின்னம்தான் இந்தப் போட்டோ ஆல்பம். ஹும்!

''சரி, சரி. டிரஸ்ஸைக் கூடக் கழற்றாமல் என்ன யோசனை!'' என்று எழுந்து உள்ளே போனாள் மாலினி. அவள் மனம் சங்கரைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

**எ**வ்வளவு காலம் இருக்கும்? நாலு ஆண்டு இருக்குமா? அதற்கு மேலும் இருக்குமா? மாலினி செ[illegible]க் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலம் அது.

மாலினிக்குப் படிப்பில் பெரு அக்கறை. சர்வகலாசாலை லைப்ரரிக்குச் சென்று புத்தகங்களை எடுத்துப் படிக்கும் பழக்கம் அவளுக்கு உண்டு. [illegible] பாடத்தில் குறிப்பிட்ட ஒரு புத்தகம் அவளுக்குக் கிடைக்கவில்லை. எப்போது விசாரித்தாலும் ''வெளியே போயிருக்கிறது'' என்ற பதிலே வந்தது.

அன்றைக்கும் லைப்ரேரியன் அதே பதிலைத் தான் சொன்னார். மாலினிக்குக் கோபம் தாங்க முடியவில்லை. ''என்ன இது! எப்போது பார்த்தாலும் இதே மாதிரி சொன்னால் நான் புகார் செய்யப் போகிறேன்!'' என்று நாலு பேர் இருக்கும்போது தன்னை மறந்து உரக்கக் கத்தினாள். அதுபோல் நடந்துகொள்வது மாலினியின் சுபாவத்துக்கு ஒத்து வராது தானாலும் புத்தகம் கிடைக்கவில்லையே என்ற ஆத்திரம் அவளை அதுபோல் பேசச் செய்து விட்டது.

லைப்ரேரியன் சற்று மிரண்டுதான் போனார். ''மன்னிக்கணும். அடுத்த தடவை வரும்போது எப்படியும் எடுத்து வைக்கிறேன். இப்போது வேறு புத்தகம் பாருங்கள்.''

மாலினி அவரை ஒரு முறை முறைத்து விட்டுப் புத்தகங்கள் எடுக்கப் பின்னால் போனாள். ஏதோ ஒரு புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கையில் —

''என்ன மேடம்! இந்தப் புத்தகம் கிடைக்காமல் இருந்ததற்காகப் பாவம் அவரை

தாலும், எந்தப் படத்தைப் பார்த்தாலும் திரும்பத் திரும்பச் சங்கரின் முகம்தான் அவள் கண் முன் தோன்றி மனத்தைக் கலங்க வைத்துக் கொண்டிருந்தது. சங்கர்! அவர் எங்கே வந்தார் இந்தக் கல்யாணத்தில்! பார்க்கவே இல்லையே! ரொம்ப நாட்களாக இவருக்கும் சிநேகிதமோ? அப்படியானால்—அப்படியானால்?

சட்டென்று அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. ''ஆமாம். சில படங்கள் நன்றாக விழவே இல்லையே! அருவருப்பாய்ச் சில போட்டோக்கள் வேறு இருக்கின்றன!'' என்றபடி தானாகச் சிலவற்றை வசந்தனிடம் காண்பித்தாள். சங்கர் புன்னகையுடன் வசந்தனின் கையைக் குலுக்கும் படமும் அதில் இருந்தது. முக்கியமாக அதை நீக்கி விடுவதுதானே அவள் எண்ணம்?

''இருந்து விட்டுப் போகட்டுமே!'' என்றான் வசந்தன். மேலாக ஒரு நோட்டம்

"ரொம்பவும் விரட்டி விட்டீர்களே!" என்று குரல் ஒன்று வெகு அண்மையில் ஒலித்தது.

மாலினி திகைத்துப் போய் நிமிர்ந்து நோக்கினாள். எதிரே ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான். மெல்லப் புன்னகை செய்தபடி குனிந்து கொண்டு புத்தகத்தை நீட்டினான்.

மாலினியின் மார்பு படபடத்தது. திடீரெனப் புத்தகம் கிடைத்த — அதுவும் முன்பின் பார்த்திராத வாலிபன் மூலம் — அதிர்ச்சியில் அவளுக்குப் பேச நா எழவில்லை.

அவனே மீண்டும், "இதுதானே உங்களுக்குத் தேவைப்படுகிறது?" என்று கேட்டான். புத்தகம் அவன் நீட்டிய கையிலேயே இருந்தது. மாலினி தயக்கத்துடன் அப்புத்தகத்தைப் பெற்றுக் கொண்டாள். அப்போது அவளையும் அறியாமல் விரல்கள் அவன் மீது பட்டபோது, உள்ளுக்குள் ஒரு சிலிர்ப்புத் தோன்றியது.

"ஆமாம். இதுதான்!... உங்களுக்கு...?" என்று இழுத்தாள்.

"பரவாயில்லை. நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள்" என்றான் அவன்.

"ரொம்ப நன்றி!" என்று மாலினி விடை பெற்றாள்.

அந்த வாலிபன் பெயர் சங்கர் என்றும், ராஜதானிக் கல்லூரியில் பெளதிக ஆசிரியராக இருக்கிறார் என்றும், மாலினி தெரிந்து கொண்டாள். வாசகசாலைக்குக் குறிப்பிட்ட சில தினங்கள் தவறாது அவர் வருவதையும் கவனித்தாள். மெள்ளத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு தனக்குப் பெளதிகத்தில் ஏற்படும் சில சந்தேகங்களை ஒரு நாள் சங்கரிடம் விசாரித்தாள். சங்கரும் அதை இயல்பாக ஏற்றுக் கொண்டு மாலினியிடம் சகஜமாகப் பழகிச் சந்தேகங்களைத் தெளிய வைத்தான்.

மாலினிக்கு அப்புறம் வழக்கமாகிவிட்டது — வாசகசாலையில் சங்கரைச் சந்திப்பதும், பெளதிக பாட சம்பந்தமான கேள்விக்குப் பதிலைத் தெரிந்து கொள்வதும். நாளாவட்டத்தில் உண்மையிலேயே எல்லாம் புரிந்



# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட

# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரிஸ் தயாரிப்பு!






**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரிஸ் போர்ன்விடா.**

Benson's/0391/TAM



''கல்யாண அழைப்பிதழா ? படியுங்கள்!''

''டால்மியாபுரம் என்கிற கல்லக்குடி பழங்கா நத்தம் ஊரைச் சேர்ந்த நக்க என்கிற நரசிம்ம லுக்கும், பல்லாவரம் என்கிற பல்லவபுரம் ஊரைச் சேர்ந்த பேபி என்கிற பத்மாசனிக்கும் மவுண்ட் ரோடு என்கிற அண்ணாசாலையில் உள்ள கல்யாண மண்டபத்தில் நடக்கிற கன்னிகா தானம் எனப்படும் திருமணத்துக்குத் தாங்கள் அவசியம் வர வேண்டும்.''

அவரே அதில் தெரியாது என்று திடமாக எண்ணியிருந்தாள் மாலினி.

ஆனால்...

இது என்ன?

சங்கர் கல்யாணத்துக்கு வந்திருக்கிறாரே? வஸந்தனுக்கு நெருங்கிய சிநேகிதராமே? இது எங்கே கொண்டு போய் விடுமோ?

மாலினி பயந்தபடியே நடந்தது.

''உனக்கு நினைவிருக்கிறதா, மாலினி? சங்கரைப் பற்றிச் சொல்லி இருக்கிறேனே! அதுதான் 'போட்டோ' கூட இருக்கிறதே'' என்று வீட்டுக்கு வந்ததும் வராததுமாக ஆரம்பித்தான் வஸந்தன்.

'எனக்கா நினைவு இல்லை? அந்த நினைவு தான் உறுத்திக் கொண்டே இருக்கிறதே' என்று எண்ணின மாலினி. ''ம்... அதற்கென்ன?'' என்றாள் வெளிப்படையாக.

''அவன் நாளைக்கு இங்கே சாப்பிட வருகிறான். கல்யாணத்தன்றைக்குத்தான் இருக்கவே முடியவில்லை அவனால். நேற்று மறுபடியும் அவனைப் பார்த்தேன். அவனை வீட்டுக்கு அழைத்தேன்!''

கையிலிருந்த டம்ளரில் மாலினியின் விரல்கள் கணகணவென்று தாளமிட்டன. முகத்தில் குப்பென்று வியர்வை அரும்பியது. ''நாளைக்கு...வந்து...'' என்று தடுமாறினாள்.

''நாளைக்கு என்ன? ஒன்றுமில்லை!'' என்று பெரிதாக ஹாஸ்யம் செய்துவிட்டவன்போல் சிரித்தான் வஸந்தன். ''சங்கர் என் பழைய 'ஃபிரெண்ட்'. அடடா — சென்னையில் படிக்கும்போது நானும் அவனும் என்ன அமர்க்களம் செய்திருக்கிறோம்!...''

மாலினிக்கு எதுவுமே புத்தி செல்லவில்லை. ஆக, சங்கர் இந்த வீட்டுக்கு வரப்போகிறார் நாளைக்கு! வந்தால் என்ன நடக்கும்? தன்னைக் கண்டவுடன், 'உன் மனைவியை எனக்கு முன்பே தெரியும்' என்று வஸந்தனிடம் கூறி விட்டால்? தான் அந்த நாளில் சங்கருடன் பழகினதை வஸந்தன் தெரிந்து கொண்டு சந்தேகப்பட்டால்? பிறகு என்ன ஆகும்?

மாலினியின் கற்பனை பயங்கரமாக விரிந்தது.

மறுநாள் பிற்பகல் வஸந்தன் சங்கருடன் வீட்டுக்கு வந்தான்.

''இவள்தான் என் மனைவி, மாலினி பி.எஸ்ஸி.. கல்யாணத்தின்போதுதான் நீ பார்க்கவில்லையே. அவசர வேலை இருக்கிறதென்று போய்விட்டாயே!'' என்று சங்கரிடம் சொன்னான் வஸந்தன்.

''என் நண்பன் சங்கர்.''

நெஞ்சு படபடக்க மாலினி கைகூப்பினாள்.

சங்கர் தன்னையே உற்றுக் கவனிப்பது போல் மாலினிக்கு ஓர் அச்சம் எழுந்தது. மெல்லப் பின்கட்டுக்குச் செல்ல முயன்றாள்.

வஸந்தனின் குரல் உரக்கக் கேட்டது.

''என்னடா வந்ததுதான் வந்தாய்! உன் 'ஒய்ஃபை'க் கூட்டி வந்திருக்கக் கூடாதோ?''

''அவளுக்கு உடம்பு சரியில்லை.''

''அட போடா சரிதான். ஏதாவது சாக்குச் சொல்லிக் கொண்டு!'' என்று சிநேகிதனின் முதுகில் உரிமையுடன் ஒரு தட்டுத் தட்டினான்.. மாலினியை நோக்கி, ''உனக்குத் தெரியுமோ மாலினி, சங்கருக்கு அந்த நாளிலே மாமா என்று பெயர். ஏனென்றால், படிக்கும்போதே கல்யாணமாகிவிட்டது அவனுக்கு! ஆனால் ஒன்று... கல்யாணமாகியும் படிப்பில் சிரத்தை குறையவில்லை அவனுக்கு. என்னைச் சொல்லு. இரும்ப பி.யு.சி. கூடப் படிக்க முடியாது இப்போது.'' வஸந்தன் உற்சாகமாகப் பேசிக் கொண்டே போனான்.

மாலினி பிரமித்துப் போய் நின்றாள். 'படிக்கும்போதே சங்கருக்குக் கல்யாணமாகிவிட்டது' — இதைத் தவிர வஸந்தன் மேலே பேசியவை எல்லாம் அவள் மனத்தில் பதியவே இல்லை. அப்படியானால்? அப்படியானால்? தான் முதன் முதலில் சந்தித்துப் பழகினபோதே சங்கர் மணமானவர்தான்! —

இடறென்று மாலினிக்குப் புரிந்தது. 'சங்கர் எந்தச் சந்தர்ப்பத்திலும் காதல் என்ற எண்ணத்துடன் நம்மிடம் பழகினதேயில்லை! ஓர் ஆசிரியனுக்குத் தகுதியான மாணவி மீதிருக்கும் ஈடுபாடுதான் அவருக்கு இருந்திருக்கிறது. நாம்தான் ஏதேதோ கற்பனை செய்து, அந்த வயதுக் கோளாறினால் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறோம்!'

ஒரு பெரும் பாரம் நீங்கி, மாலினியின் மனம் இலேசாகியது. முன்னே வந்து, சங்கரைப் பார்த்து, ''என்னை ஞாபகமில்லை? உங்களிடம் பௌதிகம் கற்றுக் கொண்டேனே?'' என்றாள்.

''ஓ...அதுதான் யோசித்தேன்; எங்கோ பார்த்த முகமாய் இருக்கிறதே என்று...''

புன்னகையுடன் வஸந்தன் பக்கம் திரும்பினாள் மாலினி. ''அந்த ஆல்பத்தை இவர் பார்க்க வேண்டாமா? கொண்டு வாருங்கள்'' என்றாள்.

இப்போது அந்த போட்டோவைப் பார்க்கையில் கலப்பில்லாத மகிழ்ச்சிதான் மாலினிக்குத் தோன்றியது. சலனமோ, பயமோ எழவே இல்லை.

"நான் கல்கத்தாவிலுள்ள தேசிய லைப்ரரிக்குப் போனபோது எனக்கு அனுமதி மறுக்கப்பட்டது. காரணம் எனக்கு வயது பதினெட்டுக்கு மேல் ஆகவில்லை. குழந்தைகள் பிரிவுக்குப் போனபோது அங்கும் அனுமதி கிடைக்கவில்லை. காரணம் எனக்கு வயது பதினான்குக்கு மேல் ஆகிவிட்டது. நான் எப்படிப் படிப்பது?"

## படிக்காத காரணம்!



- 'ஸ்டேட்ஸ்மன்' கடிதம் - மது.

ஒரு நாட்டின்
சீரழிவைக் கீழே குறிப்பிட்ட
நான்கு விஷயங்கள் எடுத்துக் காட்டும்:

1. கொள்கைகளைக் காற்றில் பறக்கவிடுவது.
2. சிறு விஷயங்களிலெல்லாம் அரசாங்கம் தலையிடுவது.
3. நாணயமற்றவர்கள் உயர் பதவிகளில் இடம் பெறுவது.
4. தகுதியுடையவர்கள் புறக்கணிக்கப்படுவது.

- முகம்மது நபியின் கருத்துரைகள் - வி. ந. ஸ்ரீதரன்

'இஸபெல்லா கவுண்ட்டி ரிபப்ளிகன்' என்ற அமெரிக்கப் பத்திரிகை ஒன்றில் இந்த அறிக்கை பிரசுரமாகி யிருந்தது: "இந்தப் பத்திரிகையில் ஏதாவது ஒரு பிழையைக் கண்டால் அது ஒரு காரியத்துக்காகவே போடப்பட்டுள்ளது என்று மதியுங்கள். ஒவ்வொருவருக்கும் திருப்தியாக இருக்கும்படி பல விஷயங்களைப் பிரசுரிப்பது எங்கள் வழக்கம். குற்றம் காண்பதையே தொழிலாகக் கொண்டவர்களின் திருப்திக்காகச் சில பிழைகளைச் செய்திருக்கிறோம்.

- 'என்பு.'



## குளிப்பவர் ஜாக்கிரதை !

வீட்டிலேயே மிகவும் ஆபத்தான அறை குளியலறைதான். இங்குதான் விபத்துக்கள் அதிகமாக நடக்கின்றன. அடுத்தது சமையலறை.

- 'வீக் எண்ட்' - 'பாலி'




பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

தங்கள் 1-2-70 இதழில் கோவூர் பஞ்சரத்னம் என்ற தலைப்பில், தியாகராஜ ஸ்வாமிகள் கோவூரில் தங்கி அந்த ஊர் ஆலய அம்பிகையான சௌந்தரிநாயகியின் மீது பஞ்சரத்னக் கீர்த்தனைகள் பாடியதாகக் குறிப்பிட்டுள்ளது. ஆனால் ஸ்வாமிகள் பாடிய கோவூர் பஞ்சரத்னக் கீர்த்தனைகள் கோவூரில் விளங்கும் சுந்தரேசப் பெருமானைப் பற்றியதாகும். அம்பிகையைக் குறித்ததல்ல.

போடி
30-1-70 பொன்னம்மா சங்கரன்

எங்கள் நகராட்சிக்கு உட்பட்ட சில தெருக்கள், சில சமயங்களில், கண்ணாடி போன்று பளபளப்பாக, கழிவுநீர் கால்வாயின் ஓரங்களில் எல்லாம் பிளீச்சிங் பவுடர் தூவப்பட்டுச் சுகாதார முறைப்படி, சுத்தமாகக் காணப்படும். அப்படியென்றால், அன்று அத்தெருவில் யாரோ ஒரு பிரபல தலைவர் அல்லது ஆளும் கட்சிப் பிரமுகர் வருகிறார் என்று அர்த்தம். மற்ற நாட்களில் அத்தெருக்கள் எல்லாமே அசுத்தங்களின் உறைவிடமாகவும், நோய்களின் பிறப்பிடமாகவும் இருக்கும். இனி எங்கள் நகராட்சியில் உள்ள தெருக்கள் சுத்தமடைய ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு தெருவுக்கும், ஒவ்வொரு பிரமுகர் வரவேண்டும் போல் இருக்கிறது. அந்தக் குறிப்பிட்ட நாளில் செய்யும் சுத்தத்தைத் தினமும் செய்தால் என்ன குறைந்து விடப் போகிறதோ, தெரியவில்லை? ஓர் அரசியல் பிரமுகரின் வருகை, ஒரு தெரு சுத்தமாகும் அளவுக்கேனும் பயன்படுதலைக் கண்டு நான் மனம் மகிழ்கின்றேன்.

சென்னை-16
4-11-69 ஆ. பாலசுப்ரமணியன்

நமது தமிழக அரசின் செய்தித் திரைப்படப் பிரிவு இதுவரை இருபது தொகுப்புகளுக்கு மேல் வெளியிட்டிருக்கிறது. மத்திய அரசு செய்திப் படங்களில் தமிழகச் செய்திகள் புறக்கணிக்கப்பட்டு வந்திருக்கின்றன என்ற குறையை நீக்கவே இப்போதைய தமிழக அரசினரால் செய்திப் படங்கள் வெளியிடப்பட்டன. இது பாராட்டுக்குரியதே. ஆனால் இது வரை வெளியிடப்பட்ட படங்கள் பொது மக்களிடையே போதுமான வரவேற்பைப் பெற்றுள்ளனவா? இல்லை என்றே கூறலாம். தமிழக அமைச்சர்கள் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள், திறப்பு விழாக்கள், லாட்டரிச் சீட்டின் மகிமை ஆகியவையே இடம் பெற்றிருக்கின்றன. தமிழகத்துக்கு விஜயம் செய்த முக்கிய பிரமுகர்கள், விவசாய முன்னேற்றத் திட்டங்கள், விளையாட்டுப் போட்டிகள், கல்வி சம்பந்தமான செய்திகள் போன்றவை திருப்திகரமான இடத்தைப் பெறவில்லை. இக்குறை உடனடியாக நீக்கப்பட்டுப் பலதரப்பட்ட துறைகளின் சிறப்புக்களை எடுத்துக் காட்டும் வகையில் இனிச் செய்திப் படங்கள் வெளியிடப்பட வேண்டும்.

ஆரணி
10-1-70 எம். சாம்பமூர்த்தி.

சிறு சேமிப்பின் அவசியம் பற்றிப் பலரும் பலவிதமாக வற்புறுத்தி வருகிறார்கள். ஆனால் தபால் நிலையச் சேமிப்பில் முதலீடு செய்பவர்களில் பலர், பணம் தேவைப்படும்போது எடுக்க முடியாமல் திண்டாடுகிறார்கள். காரணம், சேமிப்புத் தொடங்கும்போது போடும் கையெழுத்துப் போலவே சிறிதளவும் மாறாமல் பணம் எடுக்கும்போதும் பலரால் போட முடியாததுதான். இந்த மாதிரி தொல்லைகள் ஏனோ பாங்கு சேமிப்பில் அதிகமாக இருப்பதில்லை.

ஒரே மாதிரிக் கையெழுத்தை எல்லோராலும் எப்போதும் போட முடியும் என்று எதிர்பார்ப்பது தவறு. காலப் போக்கில் கையெழுத்து (சிறிதளவு) மாறுவது இயற்கை. இதை உணர்ந்து போஸ்ட்மாஸ்டர்களைத் திருப்திப்படுத்தச் சம்பந்தப்பட்டவர்கள் முயற்சி செய்ய வேண்டும். பிரசாரம் மட்டும் செய்தால் போதாது. பணம் கட்டுபவர்கள் சிரமப்படாமல் பார்த்துக் கொள்ளவும் வேண்டும்.

விழுப்புரம்,
25-10-69 ஏ. எம். அலி

புதுநிலை, இடைநிலை ஆசிரியர் பயிற்சியை முடித்த பலர் வேலை கிடைக்காமல் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு மேலும் தவித்துக் கொண்டிருக்கும் இந்த வேளையில் பள்ளிகளில் 45 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் கல்வி கற்பிக்கும் துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டுள்ளது.

இதனால் ஆசிரியர்களால் முழுமைக் கருத்துடன் போதிக்க முடியாத இக்கட்டான நிலை ஒரு புறம் இருக்க, மாணவர்களிடையே ஒழுங்கின்மையும் அதிகமாக வளர வாய்ப்பு ஏற்படுகிறது. இதனால் கல்வி பாதிக்கப்படுகிறது. இந்தக் கருத்தை மனத்தில் கொண்டு அரசு ஆசிரிய மாணவர்களின் விகிதத்தைக் குறைத்தால் நல்ல கல்வித் தரம் உருவாகவும், வேலையின்றித் தவிக்கும் ஆரம்ப ஆசிரியர்களுக்கு வேலை வாய்ப்பும் கிடைக்கும் அல்லவா?

காஞ்சிபுரம்,
19-1-70 கோ. வெங்கடசாமி

செய்வன திருந்தச் செய்வதில் சிறப்பு வாய்ந்தது டிவிஎஸ். மிகத் தேர்ச்சிபெற்ற தொழிலாளர்கள் கண்ணும் கருத்துமாய், நவீன யந்திரங்களைக் கொண்டு, மிகச்சிறந்த ரப்பரை உபயோகித்து உங்கள் பழைய டயர்களைப் புதுப்பிக்கின்றனர். விஞ்ஞான முறையில் டிவிஎஸ் ரீடிரெடிங் செய்யும் டயர்கள் புது டயர்களைப்போலவே தோற்ற மளிக்கின்றன. புது டயர்களைப்போல் உழைக்கின்றன. ஒரு புது டயர் வாங்கும் விலைக்கு மூன்று பழைய டயர்களை ரீடிரெடிங் செய்யலாம்.

**இந்தியாவிலேயே மிகப்பெரிய அளவில் ரீடிரெடிங் செய்வது டிவிஎஸ்**

## புது டயரா
## அல்லது டிவிஎஸ் ரீட்ரெட் செய்ததா?

**சொந்தக்காரர்களுக்கு மட்டுமே தெரியும்**




டிவிஎஸ் உங்கள்
நம்பிக்கைக்கு உரியது

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**
(இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)
பங்களூர் - கோயமுத்தூர் - எர்ணாகுளம் (களமசேரி)
மதராஸ் - புதுக்கோட்டை - சேலம் -
செகந்திராபாத் - திருநெல்வேலி - விஜயவாடா

SI-5293

